உ

சிவமயம்

# குமரகுருபரன்



மலர் 18] 1967-ஆ ஐப்பசி மீ 1-ம் உ (18-10-67) [இதழ் 10

## ஆசிரியர் குழு



## உள்ளுறை

உ
சிவமயம்
திருச்செந்திலாண்டவன் துணை




மலர் 18 || பிலவங்க ஞு ஐப்பசித் திங்கள் 1ம்வ [18-10-67] || இதழ் 10

# பிறவியின் பயன்

திரு. மா. கோபாலகிருஷ்ணன் அவர்கள்,
ஆசிரியர், விசூர்.

அரிது, அரிது மானிடராதல் அரிது என்பதற்கு இணங்க ஐயிரண்டு திங்களாய் அங்கமெலாம் நொந்து பெற்றுப் பைய லென்ற போதே பரிந்தெடுத்துச் செய்ய இரு கைப் புறத்தி லேந்திப்பால் நினைந்து ஊட்டிப் பாராட்டி சீராட்டி தண்டமிழ்ப் பாவலால் தாலாட்டி வளர்க்கப் பெற்று பெறற் கரிய மானிடப் பிறவியைப் பெறுகிறோம். அப்படிப்பட்ட இப் பிறவியிலேயும் கூன், குருடு, செவிடு, பேடு நீங்கிப் பிறத்தல் அரிது. பேடு நீங்கிப் பிறந்த ஞான்றும் ஞானமும் கல்வியும் நயத்தல் அரிது. இலை படர்ந்த பொய்கையின் இடத்திலே நின்று தந்தையைக் காணாது அழுத ஆளுடைய பிள்ளையார்க்கு அன்னை ஞானப்பால் ஊட்டிய காரணத்தால் ஞானம் வரப் பெற்று அதனால் கல்வி

யில் சிறந்து ஞானமும் கல்வியும் ஒருங்கே அடைந்த தன்மை இங்கு யாருக்கு வரும். அரிது; அரிது காண்.

"தோன்றிற் புகழொடு தோன்றுக அஃதிலார்
தோன்றலின் தோன்றாமை நன்று"

என்ற வள்ளுவர் வாய் மொழிக்கு இணங்கவும், ஞானமும் கல்வியும் வரப்பெற்றுத் தானமும் தவமும் செய்து புகழுடன் வாழ்ந்து, வானவர் நாடு வழிதிறக்கும் வகையிலே வாழ வேண்டும்.

"வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப் படும்."

என்றும்,

"செல் விருந்தோம்பி வருவிருந்து பார்த்திருப்பான்
நல்விருந்து வானத்தவர்க்கு."

என்றும் தமிழ் மறைதந்த தெய்வப் புலவரின் வாசகத்திற்குச் சான்றோர் பலர். தனக்கு இயலாத நிலையிலும இன்னடிசில் இட்டு, இறைவனை அறியாது இறைஞ்சி நின்ற இளையான் குடி மாறநாயனருக்கு வானவர் நாடு வழி திறந்த காட்சியினையும், வானததவர்க்கு நல் விருந்தான தன்மையையும்,

"அன்பனே அன்பர் பூசை அளித்த நீ அணங்கினோடும்
என் பெரும் உலகம் எய்தி இருநிதிக் கிழவன் தானே
முன் பெரு நிதியம் ஏந்தி மொழிவழி ஏவல் கேட்ப
இன்ப மார்ந் திருப்பீராமென்றருள் செய்தான் எவர்க்கு மிக்கான்."

என்று இறைவன் அருள் கொடுத்த காட்சியினால் அறியலாம்.

பெறற்கு அருமையான இம் மானிடப் பிறவியானது நிலையற்றது; இளமையும் நில்லாது; யாக்கையும் நில்லாது; அளவிய வான்பெரும செல்வமும் நில்லாது; நீரிற் குமிழி போன்றது இந்த யாக்கை என்றும்,

"நெருநல் உளனொருவன் இன்றில்லை என்னும்
பெருமை யுடைத் திவ்வுலகு"

என்றும் இன்றைக்கு இருப்பார் நாளைக்கு இருப்பர் என்று எண்ணத் திடமற்றது" என்றும் "வாழ்வாவது மாயம்; மண்ணாவது திண்ணம்," என்றும்,

"அத்தமும் வாழ்வும் அகத்து மட்டே, விழி அன்பொழுக
மெத்திய மாதரும் வீதி மட்டே விம்மி விம்மி யிரு
கைத்தலை மேல் வைத்து அழும் மைந்தரும் சுடுகாடு மட்டே
பற்றித் தொடரும் இருவினைப் புண்ணிய பாவமுமே."

என்றும் யாக்கையின் நிலையாமையைப் பற்றிப் பலரும் கூறியுள்ளனர். நிலையற்ற இவ் வாழ்க்கையிலே நிலையான புகழைத்தேட வேண்டும். இவ்வுலகம் நிலையானது என்று கருதாமல் வளைநிலம் உழுபவர்கள் அடுத்த விளைவுக்கு விதையைத் தேடி வைத்துக் கொள்வதைப் போல நாம் செல்லக் கூடிய அடுத்த கதிக்குண்டான நல்ல பலனைத் தேடி வைத்துக் கொள்ள வேண்டும்.

மாண்பு மிகு மனிதப் பிறவியைப் பெற்றும், ஆண்டவனின் திருக் கோலங்களையே எப்போதும் கண்டிருந்தும், சிறந்த நெறியில் நின்ற பக்தர்கள் அனைவரும் "பிறவி வேண்டேன், பிறவி வேண்டேன்," என்றே கூறியுள்ளனர். ஏனெனில், இவ் வாழ்க்கையில் எப்போதும் பிணி, பசி, மூப்பு, துன்பம் ஆகியவை நிறைந்துள்ளன. எனவே இன்னல் மிகு இப் பிறவியிலிருந்து விடுபட விரும்பியே "பிறவி வேண்டேன்" எனப் பாடித் துதித்தனர். இப்படிப்பட்ட துன்பம் மிகு பிறவியிலேயும் கோடையிலே இளைப்பாற்றிக் கொள்ளும் வகை கிடைத்த குளிர் தருவைப் போல இறைவனின் திருவுருக் கோலத்தைக் கண்டு களிதால் மனிதப் பிறவியின பயனை அடைந்ததாகக் கருதி மனிதப் பிறவி வேண்டும் என்று திருநாவுக்கரசர்,

"குனித்த புருவமும் கொவ்வைச் செவ்
வாயிற் குமிண் சிரிப்பும்
பனித்த சடையும் பவளம் போல்
மேனியிற் பால் வெண்ணீறும்
இனித்த முடைய எடுத்த பொற்
பாதமும் காணப் பெற்றால்
மனித்தப் பிறவியும் வேண்டுவ
தே இந்த மாநிலத்தே."

என்று கூறியுள்ளார். ஆகவே மனிதப் பிறவியின் பயன் இறைவனின் திருவடிகளைப் பற்றியே நினைத்தலும் அவன் புகழையே பாடுதலும் ஆகும்.

"ஏற்று யடிக்கே யிரவும் பகலும் பிரியாது வணங்குவ னெப்பொழுதும்"

என்றும்,

'நெஞ்சம் உமக்கே யிடமாக வைத்தேன் நினையாது ஒருபோதும் இருந் [தறியேன்

என்றும்,

"சலம் பூவொடு தூபம் மறந்தறியேன்
தமிழோடிசை பாடல் மறந்தறியேன்
நலம் தீங்கிலும் உன்னை மறந்தறியேன்
உன்நாமம் என்னுவில் மறந்தறியேன்."

என்றும்,

"பூக்கையாலட்டிப் போற்றி என்னுதவிவ் வாக்கையாற் பயனென்"

என்றும் திருநாவுக்கரசு சுவாமிகள் போற்றிப் பாடித் துதித் தனர்.

மனிதப் பிறவியைப் பெற்று இறைவனின் இன்னுருவை நேரில் கண்டு அவன் பொன்னுர் திருவடிகளிலே வீழ்ந்து வணங்கி அவன் நாமத்தை உணர்வோடு ஓதி பெறற்கரிய இன்பம் பெற்ற காட்சியினைச் சிறிது நோக்குவோம்.

சித்திரச் சிலைக்கை விசயனைச் செரு நீ ஒழிக எனத் தேர் மிசை நிறுத்தி, மெய்த்தவப் படிவ வேதியனுகி, வெயிலவன் புதல்வனை அடைந்த கண்ணன், ஒவிலாது கர்ணன செய்த புண் ணிய மனைத்தையும் இதயத்து அம்பின் வாய் அம்பால் அளிக்க ஏற்று, முடிவும் தோற்றமும் இலாத திருவுருக் கொண்டு தோன் றிய காட்சியினைக் கண்டு கர்ணன் வணங்கி

"வான் பெற்ற நதி கமழ்தாள் வணங்கப் பெற்றேன்
மதிபெற்ற திருவுளத்தான் மதிக்கப் பெற்றேன்
தேன் பெற்றதுழாயலங்கற் களப மார்புந்
திருப்புயமும் தைவந்து தீண்டப் பெற்றேன்
ஊன் பெற்ற பகழியினுலழிந்து வீழ்ந்தும்
உணர்வுடனின் திருநாமம் உரைக்கப் பெற்றேன்
யான் பெற்ற பெருந்தவப் பேறு என்னை யன்றி
இருநிலத்தில் பிறந்தோரில் யார் பெற்றுரே"

என்று கூறும் பான்மை படிக்கப் படிக்க இன்பம் பயப்பதாகும்.

(தொடர்ச்சி அடுத்த பக்கம் பார்க்க)

# திருமந்திரம் TIRUMANTIRAM

## ஆறுந்தந்திரம் Tantra the Sixth

டாக்டர், திரு. பா. நடராசன் அவர்கள் M. A., D. Litt.,

---

மலர் 18, இதழ் 9-ன் தொடர்ச்சி

### அறியாதாரே குருவை மனிதன் என்பர்

### Only the fools call the holy master human

6. சுத்த சிவன் குருவாய் வந்து தூய்மைசெய்து
அத்தனை நல்கருள் காணு அதிமூடர்
பொய்த்தகு கண்ணுன் நமரென்பர்; புண்ணியர்
அத்தன் சிவனென்றடி பணிவாரே.

They call mine holy master human
They indeed are fools exceeding
And of vision faulty;
He who cometh, purifieth and granteth God hood
Is indeed the Lord HimSelf in Guru form

---

(முன்பக்கத்தொடர்ச்சி)

நம்முடைய நிழல் நம்மை விட்டு மறைய வேண்டுமானுல் நாம் வேருெரு நிழலை அடைய வேண்டும். அதைப்போல இப் பிறவியாகிய நிழல் நம்மை விட்டு நீங்க வேண்டுமாயின் நாம் இறைவனின் திருவடி நிழலை அடையவேண்டும். அவ்வாறு இறைவனின் திருவடி நிழலை அடைய, இப்பிறவியாகிய கடலி லிருந்து நீந்திக் கரை சேர இறைவனின் திருவடிகளை வணங்கி, இமைப் பொழுதும் அவன் நாமம் நம் நெஞ்சத்திலிருந்து நீங் காமல் இருக்க இடம் அளித்துப், பிறப்பு அறுக்கும் பிஞ்ஞகன் தன் பெய்கழல்களைப் போற்றி, அவன் அருளாலே அவன் தாள் வணங்கிப் "பிறவியின் பயனை" அடைவோமாக.

பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவன் அடி சேராதார். (குறள்)

---

The men of holiness Knoweth this
And so adore him as Being Supreme.

பரம்பொருளாகிய சிவபெருமானே குருவாக வந்து, மலங் களைந்து, முத்தி அருள்கின்றார்; அதனை அறியாதவர் அதி மூடர்களே. அவனை மனிதனாகக் காண்போர் பொய்மை மயக்கம் கொண்டவரே. புண்ணியரோவெனில் மெய்ஞ்ஞான விழி கொண்டவராகையாலே, அவனை இறைவனென்றே பணிந்து வணங்குவர்.

குருவருளின்றி மெய்ப்பொருள் எதும் வாயாது
Nothing true attainable without Guru's grace

7. உண்மையிற் பொய்மை ஒழித்தலும், உண்மைப்பார்
திண்மையும், ஒண்மைச் சிவமாய அவ்வரன்
வண்மையும், எண்ணெட்டுச் சித்தி மயக்கமும்
அண்ணல் அருளன்றி யாரறிவாரே.

To dissolve the false in the true,
To derive the omnipotent might of Truth,
To possess the bounty of splendorous Siva's Grace,
To perform the miracles of the famed siddhies eight
— Who learneth all these
But with Guru's blessing?

மெய்ஞ்ஞானம் கைவரப்பெற்று, அஞ்ஞானத்தை அகற் றலும், அங்ஙனம் பெற்ற மெய்ஞ்ஞானத்தின் பரந்தஉறுதியை விடாது மேற்கொள்ளுதலும், ஒளி மிகுந்த சிவபெருமானின் அருளைப் பெறுதலும், புகழ்கொண்ட எட்டுச்சித்திகளைப்பெற்று விளையாடுதலும் — ஆகிய அனைத்தும் குருபரன் கருணையின்றி எவர்க்கும் கூடாதனவாகும்.

வரி 1 - 2 உண்மைப்பார் திண்மை - ஞானத்தின் பரந்த வலிமை.
வரி 3. எண்ணெட்டுச்சித்தி - புகழ்பெற்ற எட்டுசித்தி.
எட்டெட்டுச்சித்தி என்பது பாடமாகக்கொண்டு, சித்திகள் அறுபத்துநான்கு என தொகை கொள் வாருமுண்டு.

சிவகுருவும் சிவனேபோல் பரமுத்திநல்கும்
Siva Guru as unto Siva granteth finite liberation

8. சிவனே சிவஞானி யாதலாற் சுத்த
சிவனே யெனஅடி சேரவல் லார்க்கு

(தொடர்ச்சி அடுத்த பக்கம் பார்க்க)

## திருஞான சம்பந்தர் அருளிச் செய்த
# திருஇயமகத் திருப்பதிகம் (உரை)

திரு. ந. ரா. முருகவேள் அவர்கள், M. A., M. O. L.,

உற்றுமை சேர்வது மெய்யினையே
உணர்வது நின்னருள் மெய்யினையே
கற்றவர் காய்வது காமனையே
கனல்விழி காய்வது காமனையே,
அற்றம் மறைப்பது முன்பணியே
அமரர்கள் செய்வதும் உன்பணியே,
பெற்று முகந்தது கந்தனையே
பிரம புரத்தை உகந்தனையே!

(பொழிப்புரை) உமையம்மையார் பொருந்திச் சேர்ந்திருப்பது நின் திருமேனியையே, சிவஞானிகள் உணர்ந்து வழிபடுவது நின்னுடைய அருளின உண்மையினையே; கற்றறிந்த பெரியோர்கள் வெறுப்பது பிறன் காவலுக்குரிய மனைவியை விரும்புதலையே; நின்னுடைய நெருப்பு மயமான நெற்றிக்கண் சினந்து எரிப்பது மன்மதனையே; நினது மறைவிடத்தினை மறைத்துக் கொண்டு நிற்பது முன்னேயுள்ள பாம்பே; தேவர்கள் அனைவரும் இயற்றுவது உன்னுடைய திருத்தொண்டே; மகனைப் பெற்று வாரி எடுத்து, நீ அணைத்தது முருகனையே; இத்தகைய நீ, பிரமபுரம் என்னும் சீர்காழியினையே விரும்பியருளினாய்.

---

(முன் பக்கத்தொடர்ச்சி)

நவமான தத்துவ நன்முத்தி நண்ணும்
பவமான தின்றிப் பரலோக மாமே.

Siva Gnani is none but Siva Himself
And they who seek his feet as Siva's
Shalt in sooth the wonderous tatva mukti gain;
Theirs shalt not be the cycle of births any more,
But sure their reward, the liberation Finite.

சிவனும் சிவஞானியும் வேறுகார். எனவே சிவகுருவின் திருவடிகளைச் சிவன திருவடிகளேயாகச் சரண் அடைவார்க்கு, அற்புதமான தத்துவ முத்தி வந்தெய்தும். பிறவித்தளை அறும். பரமுத்தியில் சிவனோடு இரண்டறக் கலந்துபடுவர்.

(தொடரும்)

(குறிப்புரை) உமை - உமாதேவியார். மெய் - திருமேனி, உண்மை. கா + மனை - பிறன் காவலுக்குரிய மனைவி. காமன் + ஐ - மன்மதனை. அற்றம் - மறைவிடம். 'அற்றம் மறைத் தலோ புல்லறிவு' என்பது திருக்குறள். பணி - பாம்பு, தொண்டு. கந்தனை - முருகனை. உகந்தனை - விரும்பினாய். முகந்தது - வாரி எடுத்தது. (1)

சதிமிக வந்த சலந்தரனே
தடிசிரம் நேர்கொள் சலம்தரனே,
அதிரொளி சேர்திகி ரிப்படையால்
அமர்ந்தனர் உம்பர்துதிப் படையால்,
மதிதவழ் வெற்பது கைச்சிலையே
மருவிட மேற்பது கைச்சிலையே,
விதியினி லிட்டவி ரும்பரனே
வேணு புரத்தை விரும்பரனே!

(பொழிப்புரை) வஞ்சனை மிகும்படி எதிர்த்து வந்த சலந் தரன் என்னும் அசுரனை, அவனோடு ஒத்த வஞ்சனையுடன் மிக்க ஒளி பொருந்திய சக்கரப் படையினை உண்டாக்கி, அதனால் அவனது தலையை வெட்டி யருளியவனே! அது கண்டு மகிழ்ந்து தேவர்கள் உன்னைத் துதித்தலை மேற்கொண்டார்கள். சந்திர மண்டலத்தை அளாவிய மேருமலை, நின் கையில் ஏந்துதற்கு உரிய வில் ஆகும். கடலில் எழுந்த ஆலகாலவிடத்தினை உண வாக ஏற்றுக் கொள்வதை நீ வெறுக்கவில்லை. அறநூல்களில் விதித்த நெறி முறைகளின் படி உலக மக்கள் ஒழுகுவதில் விருப்பத்தையுடைய மேலான தலைவனே! வேணுபுரம் என்னும் சீர்காழியை விரும்புகின்ற சிவபெருமானே!

(குறிப்புரை) சதி - வஞ்சனை; சலந்தரன் - ஓர் அசுரன் சலம் + தரன் - வஞ்சனையைத் தரித்தவன். துதிப்பு + அடை யால். திகிரிப்படையால் - சக்கரத்தினால். கைச்சிலை - கை யில் உள்ள வில்; நீ வெறுக்கவில்லை. கைத்தல் (கைச்சல்) - வெறுத்தல். 'கைத்திலை' என்பது 'கைச்சிலை' என வந்தது. இட்ட(ம்) - விருப்பம். இரும் - பெரிய. பரன் - மேலானவன். விரும்பு + அரனே. அரன் - சிவபிரான். (2)

'திருக்கோயில்' ஆசிரியர் அனுமதி பெற்று இக்கட்டுரை பிரசுரிக்கப் படுகிறது.

காதம ரத்திகழ் தோடினனே
கானவ னுய்க்கடிது ஓடினனே,
பாதம தாற்கூற் றுதைத்தனனே,
பார்த்தன் உடலம் புதைத்தனனே,
தாதவிழ் கொன்றை தரித்தனனே
சார்ந்த வினையது அரித்தனனே,
போதம் அமரும் உரைப்பொருளே
புகலி அமர்ந்தரம் பொருளே.

(பொழிப்புரை) திருச் செவிகளில் பொருந்த விளங்குகின்ற அழகிய தோட்டினை அணிந்தவனே! அருச்சுனன் பொருட்டு வேடுவனாகக் கோலம் கொண்டு பன்றி வடிவில் வந்த மூகன் என்னும் அசுரனைக் கொல்லுவதற்கு வேகமாக ஓடியவனே! திருவடியினாற் கூற்றுவனை மார்க்கண்டேயர்க்காக உதைத்தவனே! பாசு பதக்கணை கொடுத்து அருச்சுனனின் உடம்பைக் கவசம் போலப் பாதுகாத்து மூடியவனே! மகரந்தம் சொரிகின்ற கொன்றை மலர்மாலையை அணிந்தவனே! அடியவர்களைச் சார்கின்ற வினைகளை யெல்லாம் அழித்தொழிப்பவனே! ஆசாரியனின் ஞானம் நிறைந்த செவியறிவுறூஉப்பொருளாக விளங்குபவனே! புகலி என்னும் சீர்காழியை விரும்பி எழுந்தருளியுள்ள முழுமுதற் பெருமானே!

(குறிப்புரை) அமர - பொருந்த. தோடினன் - தோடி அணிந்தவன். கடிது+ஓடினன். பார்த்தன் - அருச்சுனன். உடலம்—உடம்பை. புதைத்தனன் - கவசத்தால் மூடினுன். அரித்தனன்—அழித்தான். போதம் - ஞானம். உரை - உபதேசம். (3)

மைத்திகழ் நஞ்சுமிழ் மாசுணமே,
மகிழ்ந்தரை சேர்வது மாசுணமே,
மெய்த்துஉடல் பூசுவர் மேன்மதியே
வேதம தோதுவர் மேன்மதியே.
பொய்த்தலை யோடுஉறும் அத்தமதே
புரிசடை வைத்தது மத்தமதே,
வித்தகர் ஆகிய எங்குருவே
விரும்பி யமர்ந்தனர் வெங்குருவே.

(பொழிப்புரை) கரிய நிறம் பொருந்திய நஞ்சைக் கக்குகின்ற பாம்பே, நீ மகிழ்ச்சியுடன் இடுப்பில் அரைஞாணாகவும்

கோவணமாகவும் சேர்த்து அணிந்து கொள்வது. சிறந்த திரு நீற்றுப் பொடியையே சந்தனம் போன்று உடம்பு முழுவதும் பூசிக் கொள்வர் அவர்தம் சடையின் மீது அணிந்திருப்பது சந்திரனையே. மேலான அறிவைத் தரும் கருத்துக்களையே வேதம் முதலிய நூல்களால் ஓதியருளியவர். பொய்ம்மை கூறிய பிரமனின் தலைஓடு பொருந்தியிருப்பது தம்முடைய திருக்கையே. பின்னப் பெற்ற சடையின்கண் தரித்திருப்பது ஊமத்த மலரே. ஞான வடிவினர் ஆகிய எங்கள் குருவே! நீர் விரும்பி அமர்ந் திருப்பது வெங்குரு என்னும் பெயரையுடைய சீர்காழியே ஆகும்.

(குறிப்புரை) மாசுணம் - பாம்பு. மாசு(ண்)ணம் - பெருமை மிக்க திருநீறு. மெய்த்து - மெய்யின்கண் பூசப்படுவது ஆகிய சந்தனம். மதி - சந்திரன், அறிவு. அத்தம் - கை. மத்தம் - ஊமத்த மலர். எம்குரு - எங்களுடைய குருதேவர். வெங்குரு– சீர்காழி. (4)

உடன்பயில் கின்றவன் மாதவனே
உறுபொறி காய்ந்துஇசை மாதவனே,
திடம்பட மாமறை கண்டனனே
திரிகுண மேவிய கண்டனனே,
படங்கொள் அரவரை செய்தனனே
பகடுரி கொண்டரை செய்தனனே,
தொடர்ந்த துயர்க்கொரு நஞ்சுஇவனே
தோணி புரத்துறை நம்சிவனே.

(பொழிப்புரை) தம் திருமேனியின் ஒரு பகுதியில் இருந்து உடன் பழகுகின்ற சிறப்புப் பெற்றவன் திருமால். நம்மோடு பொருந்தியுள்ள ஐம்பொறிகளைக் காய்ந்து விலக்கி, மனம் இசைந்து ஒருமையுற்றுச் செய்யப்படும் பெரிய தவத்தினால் அடையத் தக்கவன் அப்பெருமான். உயிர்கள் எல்லாம் நன் மைகள் பெறுமாறு சிறந்த வேதங்களைத் தோற்றுவித்தருளிய வன். சாத்துவிகம் இராசதம், தாமதம் என்னும் முக்குண வயப் பட்ட கொடியவர்களின் செயல்களை அழித்தான். படத்தினைக் கொண்ட பாம்பினை இடுப்பில் அணிந்தான். கஜாசுரன் என்னும் யானையின் தோலையுரித்துப் போர்வையாகக் கொண்டு, அதனை அழித்தொழித்தான். தன் அடியவர்களைத் தொடர்ந்து நின்ற

துன்பங்களை நீக்குதலில், அவற்றிற்கு ஒரு பெருங்கொடிய நஞ்சு ஆக இருப்பவன். தோணிபுரம் என்னும் சீர்காழியில் உறைகின்ற நம்முடைய சிவன்.

(குறிப்புரை) மாதவன் - திருமால். மா + தவன் - பெரிய தவத்தின பயனாக விளங்குபவன். கண்டனன் - உண்டாக்கியவன், கண்டித்து அழிப்பவன். பகடு - யானை. அரைசெய்தனன் - இடுப்பில் அணிந்தான்; அரைத்துத் தேய்த்து அழித்தான். நஞ்சு + இவன். நம் + சிவன். (5)

திகழ்கைய தும்புகை தங்குஅழலே
தேவர் தொழுவதுந் தம்கழலே
இகழ்பவர் தாமொரு மான்இடமே
இருந்தனு வோடெழில் மானிடமே,
மிகவரு நீர்கொளும் மஞ்சுஅடையே
மின்நிகர் கின்றதும் அம்சடையே,
தகவிர தங்கொள்வர் சுந்தரரே
தக்க தராய்உறை சுந்தரரே.

(பொழிப்புரை) திகழ்கின்றகையில் ஏந்தியதும் புகைதங்குகின்ற நெருப்பே! தேவர்கள் வணங்குவது திருவடிகளையே. இகழ்ந்தவர்கள் ஆகிய தாருகாவன முனிவர்கள் ஏவிய மான் இடக்கையில் உள்ளது. தகுதியுடைய அடியவர்களை ஆட்கொள்வதற்காக எழுந்தருள்வது சிறந்த மானிடத் திருமேனி கொண்டே. மிகுதியாகப் பெருகிவருகின்ற நீரைத் தம்மிடம் கொண்டுள்ள மேகங்கள் அடைந்து தங்கியிருப்பதும், மின்னலைப் போன்று ஒழி மிக்குத் திகழ்வதும் அழகிய சடையே. தகுதியாகச் செய்யப் பெறும் தவமும் நோன்புகளும் ஆகியவற்றை ஏற்றுக் கொண்டு அருள்புரியும் உலக முதல்வர், சிறந்த பூந்தராய் என்னும் சீர்காழியில் உறைகின்ற அழகர் ஆகிய சிவபெருமானே!

(குறிப்புரை) தங்கு + அழல். தம் + கழல். மான் + இடம். மானிடம் -மனித வடிவம். மஞ்சு + அடை. மஞ்சு - மேகம். அம் + சடை. சுந்தரர் - அழகர். (வ) சுந்தரர் - உலக முதல்வர். வசுந்தரை, பசுந்தரை - உலகம். பூந்தராய் - சீர்காழி. (6)

ஓர்வரு கண்கள் இணைக்குஅயலே,
உமையவள் கண்கள் இணைக்கயலே,
ஏர்மரு வுங்கழல் நாகமதே,
யெழில்கொள் உதாசனன் ஆகமதே;
நீர்வரு கொந்தள கங்கையதே,
நெடுஞ்சடை மேவிய கங்கையதே,
சோர்வரு யோகதி யம்பகனே
சிரபுர மேயதி யம்பகனே.

(பொழிப்புரை) தியானித்தல் இல்லாத புறக்கண்கள் இரண்டிற்கும் அப்பாற்பட்டவர். உமையம்மையின் கண்கள் கயல் மீனகள் போல்வன. அழகு பொருந்திய கழல் என்னும் கால் அணியாகத் திகழ்வது பாம்பே. எழுச்சி கொண்ட அக்கினியே திருமேனியாக விளங்குவது நீர்மை பொருந்திய கொத்தான கூந்தலானது ஒழுங்காக உள்ளது. நீண்ட சடையின்மேல் இருப்பது கங்கையாறே. சேர்தற்கு அரிய யோக நிலையில் மூன்று கண்களை யுடையவன். சிரபுரம் என்னும் சீர்காழியில் மேவியுள்ளவன். தீயை அம்பாகக்கையிற் கொண்டிருக்கும் சிவபெருமான்.

(குறிப்புரை) ஓர்வு + அரு - தியானித்தல் இல்லாத. இணைக்கு + அயல் - இரண்டிற்கும் அப்பாற்பட்டவர். இணை + கயல் - இரண்டு கயல் மீன்கள் போன்றவை. இணைக்கு + அயல். இணை + கயல். நாகம் - பாம்பு. ஆகம் - உடம்பு. உதாசனன் - அக்கினி. நீர்வரு - நீர்மையுடைய, அழகு பொருந்திய. கொந்து + அளகம் + கையது - கொத்தான கூந்தல் ஒழுங்காக உள்ளது. கை - ஒழுங்கு. தியம்பகன் (திரியம்பகன்) - மூன்று கண்களை யுடையவன். தியம்பகன் (தீ + அம்பு + அகன்) - தீயை அம்பாகக்கையிற் கொண்டிருப்பவன், சிவபெருமான். (7)

ஈண்டு துயில்அமர் அப்பினனே,
இருங்கண் இடந்து அடி அப்பினனே;
தீண்டல் அரும் பரிசு அக் கரமே,
திகழ்ந்தொளி சேர்வது சக்கரமே;
வேண்டி வருந்த நகைத்தலையே,
மிகைத்தவ ரோடு நகைத்தலையே

பூண்டனர்; சேரலும் மாபதியே,
புறவம் அமர்ந்த உமா பதியே.

(பொழிப்புரை) இவ்வுலகில், அப்பு (நீர்) ஆகிய கடலின்கண் விரும்பித் துயில்கின்றவன் ஆகிய திருமால், தன்னுடைய பெரிய (தாமரை மலர் போன்ற) கண்ணைத்தோண்டி, நின் திருவடிகளில் அப்பி வழிபட்டான். தீண்டுதற்கு அரிய தன்மையையுடைய அந்தக் கையில், ஒளி மிகுந்து சேரப் பெற்றது சுதர்சனம் எனும் சக்கரம் ஆகும். தாருகாவன முனிவர்கள் விரும்பி வருந்தி முயன்று வேள்வியினின்று வருவித்தது, நகைக்கின்ற வெண்தலையையே; பகைத்துநின்ற அம் முனிவர்களையே நகைத்து ஏளனம் செய்வது போல, அவ்வெண்தலையைச் சிவபெருமான் ஏற்று அணிந்து கொண்டனர். புறவம் என்னும் பெயருடைய சீர்காழியை விரும்பிய உமையம்மையின் கணவர் ஆகிய இறைவன், சேர்ந்து உறைவது அன்பர்களின் உள்ளம் ஆகிய சிறந்த இடமே யாகும்.

(குறிப்புரை) அப்பு – நீர், கடல். அப்புதல் – சார்த்துதல். இடந்து-தோண்டி. மிகைத்தவர்–செருக்கினுற் பகைமை கொண்டவர்கள். பரிசு + அ + கரமே. சேரலும் + மா + பதியே. உமா + பதியே. மாபதி – சிறந்த இடம். உமாபதி – உமாதேவியின் கணவர். (8)

நின்மணி வாயது நீழலையே,
நேசம தானவர் நீழலையே;
உன்னி மனத்தெழு சங்கமதே.
ஒளி அதனேடு உறு சங்கமதே;
கன்னி யவரைக் கவரும் களனே,
கடல்விடம் உண்ட கருங்களனே;
மன்னி வரைப்பதி சண்பையதே,
வாரி வயல்மலி சண்பையதே.

(பொழிப்புரை) நின்னுடைய, மணிகள் கட்டிய கோயில் வாயிலின் குளிர்ச்சியையே விரும்பி நிற்கும் அடியவர்களுக்கு, நீ சிறிதும் தொலைவிற் செல்லாமல், அவர்களின் அருகிலேயே இருப்பாய், நின் திருவடியினை உள்ளத்தில் எண்ணி வழிபடுகின்ற அடியவர்களே, திருவருள் ஒளியிற் பொருந்துகின்ற

திருக்கூட்டம் ஆவர். பக்குவம் உற்ற ஆன்மாக்கள் ஆகிய கன்னிப் பெண்களின் உள்ளங்களைக் கவர்ந்து கொள்ளுகின்ற கள்வனே! கடலில் தோன்றிய ஆலாலம் என்னும் நஞ்சினை யுண்டதனால், நீலநிறம் பெற்ற கழுத்தை யுடையவனே! நிலை பெற்றுத் தங்கி, நீ நினக்கே உரியதாக வரைந்து கொண்ட திருத்தலம், சண்பங்கோரைகள் நிறைந்து, வளம் மிகுந்த வயல்கள் சூழ்ந்த, சண்பை என்னும் பெயருடைய சீர்காழியே யாகும்.

(குறிப்புரை) அடியவர்கள் இறைவனின் கோயில் வாயிலையே தம் புகலிடமாக விரும்புவர். ஆதலின் 'நின் மணி வாயது நீழலையே நேசமதானவர்' என்று சம்பந்தர் அடியவர்களைச் சிறப்பித்தார். "புலையனேனை உன் கோயில் வாயிலிற் பிச்சன் ஆக்கினாய், பெரிய அன்பருக்கு உரியன் ஆக்கினாய்" என்று மாணிக்கவாசகர் அருளிச் செய்திருத்தலும் காண்க. சங்கம்-திருக்கூட்டம். முன்னையது 'சங்கமம்' என்பதன் சிதைவு; அடியார் என்பது பொருள். 'களன்' கள்ளன் என்பதன் இடைக்குறை. கருங்களன்-நீலகண்டம். களன்-கழுத்து. சண்பை-சண்பங்கோரை; சீர்காழி. (9)

இலங்கை அரக்கர் தமக்கு இறையே,
இடந்து கயிலை எடுக்கிறையே;
புலன்கள் கெட, உடன் பாடினனே;
பொறிகள் கெட உடன்பாடினனே:
இலங்கிய மேனி இராவணனே,
எய்து பெயரும் இராவணனே;
கலந்தருள் பெற்றது மாவசியே,
காழி அரன்அடி மாவசியே,

(பொழிப்புரை) இலங்கையில் இருந்த அரக்கர்களுக்கு அரசன், கயிலை மலையைச் சிறிதே பெயர்த்து எடுக்க முயல, இறைவன தன் பெருவிரல் நகநுதியால் மெல்லென ஊன்றலும், தன் வலிமை யனைத்தும் அழிதலால், உடனே அவன் இறைவனைத் துதித்துப்பாடினான். இறைவனும், அவ்வரக்கர் கோமான் பொறிகள் கெட்டுச் செருக்கொழிந்ததனால், அவனது இசையை அப்போதே உவந்து ஏற்று, அவனுக்குத் திருவருள் புரிந்தான்,

இரவின் வண்ணம் போன்று கரிய நிறம் உடைய அவ்வரக்கன், அடைந்த பெயரும் இராவணன் என்பதாகும். இறைவனின் திருவருளிற் புகலிடம் அடைந்து, அவன் பெற்றது பெரியதொரு வாள்! காழி என்னும் தலத்தில் உள்ள சிவ பெருமானின் திரு வடிகள் மிக்க கவர்ச்சி (அழகு) உடையன.

(குறிப்புரை) இறை—அரசன், சிறிதளவு. உடன்+பாடினுன்—உடனே துதித்தான். உடன் பாடினன்—உடன்பட்டான், இசைந்தான். இரா+வணன்—இரவைப் போன்ற கரிய நிறம் உடையவன். இராவணன்—அழுதலைச் செய்தவன. இராவணம்—அழுதல். வசி—வாள், கவர்ச்சி. (10)

கண்நிகழ் புண்டரி கத்தினனே,
கலம்திரி புண்டரி கத்தினனே;
மண்நிக ழும்பரிசு ஏனம்அதே,
வானகம் ஏய்வகை சேனமதே;
நண்ணி அடிமுடி எய்லதரே,
நளிர்மலி சோலையில் எய்து அலரே;
பண்ணியல் கொச்சை பசுபதியே
பசுமிக ஊர்வர் பசுபதியே.

(பொழிப்புரை) தாமரை போன்ற கண்களையுடைய திருமால், அவர்தம் உந்தித் தாமரையில் உதித்த பிரமன் ஆகிய இருவரும, மண்ணைத் தோண்டிச் செல்லும் தன்மையில் பன்றியாயும், வானகத்தைப் பொருந்தி ஆராயும் வகையில் அன்னமாயும் உருக்கொண்டு தேடியும், நினனுடைய திருவடியையும் திருமுடியையும் அடையப் பெற்றிலர். குளிர்ச்சி மிக்க சோலைகளில் உள்ள மலர்களும, இனிய பண்களும் விளங்குகின்ற கொச்சைவயம் என்னும தலததில் எழுந்தருளியுள்ள இறைவர், உயிர்களுக்கெல்லாம் தலைவராதலின் பசுபதி எனப்படுவார். பசுவாகிய காளை மாட்டின் மீது ஊர்ந்து செல்லுதலாலும், அவருக்குப் பசுபதி என்னும் பெயர் பொருந்துவதாகும்.

(குறிப்புரை) புண்டரிகம்—தாமரை. தாமரை போன்ற அழகிய கண்கள் உடைமையால் திருமாலுக்கும், அவர்தம் திருவுந்தியிற் கிளைத்த தாமரை மலரில் தோன்றியதனுல் பிரமனுக்கும், புண்டரிகத்தன் என்பது பெயராயிற்று. பரிசு+ஏனம்,

ஏனம்-பன்றி. சேனம்-பருந்து, கழுகு. அஃது ஈண்டுப் பறவை யாகிய இன இயைபு பற்றி அன்னத்தைக் குறித்தது. எய்தலர் (எய்து+அல்+அர்) - அடையாதவர்கள். எய்து+அலர்-எய்து கின்ற மலர்கள். பசுபதி-உயிர்களுக்குத் தலைவர். 'பசு' என னும் சொல் ஈண்டுக் காளைமாட்டைக் குறித்தது. "பல பல வேடம் ஆகும் பரன், நாரிபாகன், பசு ஏறும் எங்கள் பரமன" என்னும் கோளறு பதிகப் பாடல் காண்க. (11)

பருமதில் மதுரைமன் அவைஎதிரே,
பதிகமது எழுதுஇலை அவைஎதிரே;
வருநதி இடைமிசை வருகரனே,
வசையொடும் அலர்கெட அருகுஅரனே;
கருதலில் இசைமுரல் தரும்மருளே,
கழுமலம் அமர்இறை தரும்அருளே;
மருவிய தமிழ் விரகன மொழியே,
வல்லவர் தம்இடர் திடம்ஒழியே.

(பொழிப்புரை) பருத்த கனமான மதில்களால் சூழப்பெற்ற மதுரை மாநகர்க்கு, அரசனாகிய பாண்டியனின் அவைக் களத் துள்ளோர் முன்னிலையில், பதிகம் எழுதப்பெற்ற ஓலைகளானவை, வைகை யாற்றின்கண் எதிரேறிச் செல்லும்படி செய்தருளிய வனே! புறச் சமயத்தவர் கூறும் வசையும் பழிகளும் ஒழியும்படி அருகர் ஆகிய சமணர்களை அழித்தவனே! எண்ணுதற்கு இய லாத சிவநெறியின் புகழானது, எங்கும் பரவி ஒலிக்கும்படி நீ செய்வித்தது, மிக்க வியப்பேயாகும். கழுமலம் என்னும் சீர் காழியை விரும்பி எழுந்தருளியுள்ள சிவபெருமான், திருவருளே புரிந்து நலம் செய்வார். அத்திருவருளைப் பொருந்திய தமிழ் விரகனது மொழியாகிய இத்திருப்பதிகத்தை, ஓதியுணர்ந்து இறைவனை வழிபட வல்லவர்களின் துன்பங்கள் ஒழிவது உறுதி யாகும்.

(குறிப்புரை) மதுரைமன்-பாண்டியன். அவை எதிரே - அவைக்களத்தில் உள்ள சான்றோர்களின் முன்னிலையில். எழுது+இலை+அவை-எழுதப்பெற்ற ஓலைகளானவை. 'பதிகம்' என்றது, 'வாழ்க அந்தணர்' எனத் தொடங்கும் திருப்பாசுரப் பதிகத்தைக் குறிக்கும்.

(தொடரும்)

# முத்துக்குமார சுவாமி பிள்ளைத்தமிழ்

## உரைநடை

பாலகவி வயிநாகரம்,

திரு. வே. இராமநாதன் செட்டியார் அவர்கள்,

தேவகோட்டை.

(மலர் 18. இதழ் 9-ன் தொடர்ச்சி)

கம்பக் களிற்றுக் கடற்ருனை வீரர்கட்
கடையிற் கடைக்க னலெழக்
கண்டொட் டுணுஞ்சில மருட்பேய் கரிந்தெழு
கடுங்குருதி வெள்ள முழ்கித்
தும்பைத் தலைச்செம் மயிர்ச்சிகை யினைச்சுடு
கனற்சிகை யெனப்ப தைப்பச்
சூட்டிறைச் சிக்குச் சுணுங்குங் குறட்பேய்க்கொர்
சூர்ப்பேய் கொழுந் தசைகள்கோத்
தம்பிற் சுடத்தான் கவந்தமொடு தொந்தமிட்
டாடும் பறந்த லைநிலத்
தானைப் பிணக்குன்று மவுணப் பிணக்காடும்
அளறுபட் டொழிய நின்ருேர்
செம்பொற் றடந்தே ருருட்டிவரு சேவகன்
சிறுதே ருருட்டி யருளே
திருவளர வளர்கந்த புரிவள ரிளங்குமர
சிறுதே ருருட்டியருளே. 93

அசைகின்ற யானைகளையுடைய மிகுந்த சேனை வீரர்களது கடைக்கணகளில்கடையூழிக்காலததில்உண்டாகின்றநெருப்பை யொத்த நெருப்புத் தோனறவும் இறந்த வீரர்களது கண்ணைத் தோண்டி உண்ணும் மயக்கமுடைய சில பேய்கள் பிரிட்டெழு கின்ற கடிய குருதி வெள்ளத்தில் முழ்கித் தும்பைமாலையை யணிந்த தலையிலே யுள்ள அவ்விரர்களது செம்மயிர்க் குடுமி யைச் சுடுகின்ற தீக்கொழுந்தென்று நினைத்து அஞ்சவும் சுட்ட தசைக்கு முணுமுணுத்து அழுகின்ற குறுகிய இளைய பேய்க்கு

ஒரு அச்சத்தைத் தரும் பெரிய பேய் கொழுமையாகிய தசைகளை அம்பிலே கோத்துச் சுடுவதற்குத் தலையற்ற உடலோடு உடனிணைந்தாடுகின்ற போர்க்களத்தில் யானைகளின் பிணக் குன்றுகளும் அவுணர்களின் பிணக்காடுகளும் சேறுபட்டொழியும் படி நின்று செம்பொன்னாலாகிய பெரிய தேரைச் செலுத்தி வருகின்ற பெருவீரனே! சிறு தேரை உருட்டி யருளுவாயாக. எல்லாச் செல்வங்களும பெருகும்படி தழைக்கின்ற கந்தபுரியில் எழுந்தருளியுள்ள இளங் குமரனே! சிறு தேரை உருட்டியருளுவாயாக.

வண்டேறு செந்நிறப் பங்கித் தலைக்கமல
வனமுடு குருதி யாற்று
மால்யானை கையெடுத் தார்த்துநீந் தப்புணரி
மகரமீ னெனநி னைந்து
கொண்டேகு சிறுகுடர்ப் பெருவலை யெடுத்தெறி
குறட்பேய் நெடுஞ்சி னமுறக்
குறுநரி பிடித்தீர்ப்ப வலறுவதும் வீரர்தொடு
கொலைநேமி யவுண ருயிரை
உண்டேகு வதுமொருவன் விடவோ விடுங்கரிக்
குதவவரு திகிரி யேய்க்கும்
ஒல்லென் பறந்தலை மறந்தலைக் கொண்டசூர்
உய்த்திட்ட விந்த்ர ஞாலத்
திண்டேரை யுருளாது நிற்கப் பணித்தவன்
சிறுதே ருருட்டி யருளே
திருவளர வளர்கந்த புரிவள ரிளங்குமர
சிறுதே ருருட்டி யருளே. 94

வண்டுகள் ஏறி மொய்க்கின்ற சிவந்த நிறத்தையுடைய குடுமித்தலைகளாகிய செந்தாமரைகள் நிறைந்த காட்டுக் கிடையில் பாய்கின்ற குருதியாற்றில், பெரிய யானைகள் கையெடுத்துப் பிளிறி நீந்த அவைகளைக் கடலிலுள்ள மகர மீன்கள் என நினைத்துத் தானெடுத்துச் செல்லுகின்ற சிறுகுடராகிய பெரிய வலையை வீசி அவைகளை இழுக்கத்தொடங்கிய ஒரு குறட் பேயானது பெருங்கோபமடையும்படி குறுநரியொன்று அக் குடர் வலையைப் பிடித்து இழுக்க, அது கண்டு அந்தப்பேய்

(தொடர்ச்சி அடுத்த பக்கம் பார்க்க)

உ

சிவாயநம

# ஸ்ரீ குமரகுருபரசுவாமிகள் சரித்திர சார பஞ்சகம்

அருந்தமிழ்ப் பாண்டி நாட்டில்வண் புகழ்க்கை
லாசமா புரத்தில்வே ளாள
ரரியசண் முகசி காமணிக் கவிரா
யருஞ்சிவ காமியம் மையுஞ்செய்
பெருந்தவ மதனுற் செந்தில்வேற் குகன்றன்
பேரரு ளாலுதித் தொருவர்
பேசுத லிலாதைந் தாண்டுகா றமரப்
பெற்றவர் பெரிதுள மயர்ந்தே
திருந்துமக் குகன்சந் நிதியினி லொருமண்
டலத்தினிச் சேயுறு முகைத்
திறமகன் றிலதேன் மடிவமென் றுறையச்
சிறுவர்சொப் பனத்தினிற் கடைநாட்
பொருந்திவேள் குமர குருபர னெனப்பேர்
புனைந்துநா வதனிலா றெழுத்தும்
பொறித்தலு முடன்வாக் குடையராய்க் கந்தர்
கலிவெண்பாப் புகன்றுபோற் றினரே. 1

போற்றியோர் குருவை அருள்கென வேண்டப்
புகலுரை தடைப்படும் யாங்கப்

---

இப்பாடல்கள் சிதம்பரம் ஈசானியமடம் ஸ்ரீ இராமலிங்கசுவாமிகள் அவர்கள் 65 – ஆண்டுகளுக்குமுன் பதிப்பித்த ஸ்ரீ குமரகுருபரசுவாமிகள் பிரபந்தத் திரட்டினின்று எடுக்கப்பெற்றன.

---

(முன்பக்கத்தொடர்ச்சி)

அலறுவதும் வீரர்கள் வீசிய கொலைத் தொழிலையுடைய சக்கரப் படை அசுரர்களது உயிரையுண்டு செல்லுவதும் முன்னொரு நாளில் ஓலமிட்ட யானையைக் காப்பாற்றத் திருமால் விடுக்க வந்துதவிய சக்கரப்படையை ஒத்திருக்கின்ற ஒலி மிகுந்த போர்க்களத்தில் வீரம் செறிந்த சூரபன்மன் செலுத்திய இந்திர ஞாலமென்னும் திண்ணிய தேரை உருளாது நிற்கும்படி ஆணையிட்டவனே! சிறு தேரை உருட்டி அருளுவாயாக. எல்லாச் செல்வங்களும் பெருகும்படி தழைக்கின்ற கந்தபுரியில் எழுந்தருளியுள்ள இளங்குமரனே! சிறுதேரை உருட்டியருளுவாயாக

(தொடரும்)

புங்கவன் றனையே கொள்கென வசரி
    ரியிற்பகர் தலும்புற விடைகொண்
டாற்றல்சான் மதுரைக் கயற்கண்ணு யகியின்
    னேத்தமி ழியற்றுபு கைக்கொண்
டடைதலும் பரங்குன் றதுதிரு மலைநா
    யகர்க்கம்மை கனவினி லருளத்
தேற்றிய வாறே யெதிர்கொடு பணிந்தன்
    னவர்திரு முறையொடு மவரைத்
திறல்கயத் தேற்றிச் சந்நிதி சேர்க்கத்
    திகழ்ந்தரங் கேற்றுழி வருகை
சாற்றுறு பருவத் துமையிளங் கோலந்
    தயங்கநா யகர்மடி யமர்ந்து
தானுவந் தருளி மணிவடந் தரிக்குந்
    தகைபெறி இ முற்றுவித் தனரே. 2

முற்றுவித் ததன்பின் கனகமா திகளா
    லாட்டிமொய் கழல்பதத் தணிந்து
முதிர்ந்தபல் விருதும் வைத்தர சிறைஞ்ச
    முழுதுமேற் றம்பிகை குறமும்
மற்றிரட் டைமணி மாலையு மதுரைப்
    பிரான்கலம் பகமுமம் மன்னர்
வாஞ்சையி னீதி நெறிவிளக் கமுமே
    வனைந்தாரூர் நான்மணி மாலை
தெற்றென விளம்பித் தருமைசார்ந் தொளிமா
    சிலாமணித் தேசிகர் கடாவச்
செப்பிறுக் குங்காற் றிருத்தொண்டர் புராணத்
    தினிலைந்து பேரறி வென்ன
வுற்றவவ் விருத்தத் தனுபவம் வினவ
    வுறுவிடை தடைப்படு தலுமுன்
னுயர்குகன் பணித்த துணர்ந்துட விருக்கை
    யொருவியே பணிந்தனர் மாதோ. 3

பணிந்தெதிர் நின்றென் பிழைபொறுத் தாட்கொண்
    டருள்கெனப் பரவலுங் காசிப்
பதியினி லன்றேற் றில்லையம் பதியிற்
    பரிந்தொர்மண் டலம்வசித் தெய்திற்

றணிந்தபே ரருளீ குவமெனப் பணிக்கச்
சென்றுவே ளூர்தொழு தொருவுஞ்
செவ்வியிற் செவ்வே ளருச்சகர் போலச்
சேர்ந்துவெண் ணீறளித் தெமக்கு
மணிந்துரை யொருபிள் ளைக்கவி யெனச்சொற்
றகன்றுபொன் பூத்தவென் மொழிவா
னளிக்கவங் ஙனமே துதித்துநற் றில்லை
யணுகிமும் மணிக்கோவை யோடு
தணிந்தொரு புலவர் பணிந்திடுஞ் செய்யுட்
கோவையுந் தரித்திறைக் குமைக்குத்
தகவிரட் டைமணி மாலையு மிலைந்து
தங்கியே தருமையேய்ந் தனரால். 4

ஏய்ந்துமும் மணிக்கோ வைத்துதி யியம்பி
யேற்றுப தேசமும் விடைபெற்
றேகுமிப் பிள்ளைப் பெருமானை யங்கா
ராதிய ரிகல்காஞ்சி யினில்வென்
ருய்ந்துகா சியிற்கே தாரமுன் விளக்கிக்
கலம்பக மறைந்தகி லேசர்க்
கருட்கலா வல்லி மாலைசொற் றிந்துஸ்
தானபா ஷையில்லிற லமைந்தே
பாய்ந்தெழு மரிமேல் டில்லிபா ஷாவின்
பாலுறீஇப் பலபிர சங்கம்
பண்ணியுந் தீத்தம் பந்தமு வியுமுன்
பலவுண வாக்கியும் வேட்கை
வாய்ந்துறச் செய்தன் னவர்புரி மடத்தில்
வளர்த்தறம் பலவும்வை காசி
மதிகுறை பக்கத் திருதிகைத் திதியிற்
சிவனருட் கழலின்மன் னினரே. 5

---

# GANAPATYA CULT

Thiru Dr T. M P. Mahadevan Avergal, MA., Ph.D.
(Director, Centre for Advanced study in Philosophy,
University of Madras)

Ganapatya is the cult of the elephant-faced God, Ganapati, whose familiar figure is to be found in almost every temple in India, as also at cross-roads and river crossings on tank-bunds and underneath holy trees, and in fact, in all sorts of odd corners and difficult places His name is invoked and form worshipped at the commencement of every undertaking, secular or sacred; his symbols are marked at the head of literary productions and even of ordinary letters. At his temples. devotees make gestures expressing penitence for wrongs done, and break cocoanuts as thanksgiving for successes achieved One of the important festive days in the Hindu Calendar, which falls in August- September, commemorates the birth of Ganesa. It is celebrated all over India, and on a grand scale especially in Maharastra.

Some scholars believe that Ganesa was originally a non-Aryan harvest-god, later received into the Hindu pantheon. Others hold that the origins of this god may be traced in the Rg Veda, in the descriptions given there of deities such as the Maruts, Rudra, Brhaspati, and Indra. Popular Hinduism looks upon Ganesa as the son of Siva and Parvati, and elder brother of Skanda. In the Puranas there are various legends about the birth of Ganesa. According to some

The above article is reproduced with the kind permission of the President of Nanganallur Sri Varasiddhi Vinayagar Temple 'Souvenir' Committee.

of them, he was begotten by Siva alone, according to some others, by the Devi alone, and according to still others, by both The Varahapurana makes Ganesa spring out of Siva's forehead. The Skanda-and Matsya-Puranas say that this god was created by Parvati out of the oil and ointments used in her bath, mixed with the impurities of her body. According to the Suprabhedagama, Ganesa was born of Siva and Parvati who had assumed the form of an elephant-pair. Some accounts describe the god's elephant-head as a congenital peculiarity: others attribute it to accident. The Siva-Purana seeks to reconcile the several versions of the birth of Ganesa by saying that his origin is different aeons of creation.

The names and epithets of Ganesa are descriptive of his form and function. He is called Ganesa and Ganapati because he is the lord and leader of Siva's attendants. He is Gajanana—He of the Elephant-face, Vakra-tunda—He of the Twisted Trunk, Ekadanta—He of the One Tusk, Lambodara—He of the full Belly. He rides a rat; hence the name Akhuratha. He interposes obstacles and also removes them; so he is Vignesvara, Vighnaraja, Vinayaka He is Bestower of Success (Siddhi-data), Protector (Heramba). It is as the god of obstacles that Ganesa has gained enormous popularity. Devotees propitiate him for their own success and for the defeat of their opponents. In one of the Puranas, Siva addresses his elephant-faced son as follows: 'Thy name shall be Ganesa, Vinayaka, Vighnaraja, the son of Siva. Success and disappointment shall proceed from thee. Thou shalt be worshipped and invoked before the other gods on all occasions, or otherwise the object and prayer of him who omits to do so shall fail'.

According to the old orthodox tradition, Ganesa was a Bramacarin, a bachelor god. But, with the passage of time, legend assigned to him two consorts, Buddhi and Siddhi,, personifications of Wisdom and Success. In the most ancient representations he was figured without a female companion. But, with the coming into existence of the Ganapatya sect, probably sometime in the sixth century A D., he was imaged with a devi seated beside him For this sect, Ganapati is the highest God, higher than even Brahma, Visnu and Siva. The Ganapati Upanisad opens with this prayer:

'Om! obeisance to Ganapati! Thou alone art the visible Truth. Thou art the Greator, Preserver, Destroyer. Thou art all this, Brahman. Thou art, verily, the eternal Self. All this universe is born from thee. All this universe subsists in thee All this universe gains resolution in thee...Thou art Brahma, thou art Visnu, thou art Rudra....'

Influenced by the Sakta philosophy, the followers of the Ganapati-cult evolved the conception of Sakti-Ganapati with five esoteric forms. The five Sakti-Ganapatis are: Ucchista-Ganapati, Maha-Ganapati, Urdhva-Ganapati, Pingala-Ganapati, and Lakshmi-Ganapati. Anandagiri refers, in his Sankara-digvijaya, to six varieties of the Ganapatya sect. Though, according to all of them, Ganapati is the supreme God, each worships him under a different name, and in a some what variant form, making use of different Mantras. The first group of Ganapatyas mentioned by Anandagiri consists of worshippers of Maha-Ganapati, who is to be meditated upon as being red of colour, with ten arms, and with his Sakti beside him He is to be adored as the Creator of all gods, the supreme Self,

The second group worships Haridra-Ganapati, yellow of colour, with four arms, and possessed of a third eye. He is to be conceived as Leader of all the gods. His devotee should have his both arms branded with the elephant-face of the God having only one tusk. The third group consists of those who propitiate Ucchista-Ganapati, adopting vamacara. He is to be meditated upon as having four arms and as being in company with his Sikti. The pancatativas should be offered to him. His devotee should have a red mark on his forehead. All castes are to be admitted to his worship. The followers of the other three Ganapatis, Navanita, Svarna, and Santana, claim that they are adherents of the Veda-marga. But they too are Ganapatyas since their chief God is Ganapati, the other gods being but parts of him.

The adoration of Ganapati was not confined to the Hindus; it was adopted by the Buddhists also who claimed that a mystic Mantra is praise of Ganesa called the Ganapati-hrdaya, was revealed by the Buddha himself to his favourite disciple Ananda at Rajagrha. Emigrants and travellers from India took with them to distant lands the image and cult of Ganesa, the Remover of Obstacles. The Buddhist monks who crossed the seas and went to China introduced in that country the Tantric texts and practices. One of the Mahayana doctrines which became popular there was that of the mandalas of the Two Parts known as the Vajra-dhatu and the Grabha-dhatu. These are mystic diagrams wherein Vinayaka has his allotted place. In China and Japan, Ganesa was known under two aspects. Vinayaka with the single form, and Kwanshi-t'ien (Kangi-ten) which is Vinayaka with the double form. The double form is peculiar to these countries, and was represented by

two elephant-faced deities standing opposite each other; interlaced The sectaries who worshipped this form adopted modes of secret ritual, not very different from the Tantric technique.

It is quite in keeping with the tradition of Indian thought that a god who was first conceived as one of the gods should in course of time gather round him a group of followers who would promote him to the highest place of honour. But whoever be the god that is thus promoted, one discerns the same philosophy at work—namely, the philosophy of unity which is expressed in the early Rg-Vedic text: Ekam sad-vipra bahudha vadanti, 'Reality is one: sages call it by different names.' This central poilosophical conception is applied to Ganesa by his followers. The following verses of the Saradatilaka express the inner significance and purpose of Ganesa worship:

Padam stutinam apadam srutinam.
lilavataram param astamarteh,
Nagatmako va purusatmako vety-
abhedyam adynm bhaja vighnarajam.
Vedanta-gitam purusam bhaje'ham
atmanam anandaghanam hrdistham,
Gajananam yan-mahasa jananam
mahandhakaro vilayam prayati.

'Pray to Vighnaraja who is the object of all praise, but whom not even the Vedas can attain, who is the playful incarnation of Siva with eight forms, and about whose shape it is not possible to say whether it is elephantine or human, and who is primeval'.

'To the elephant-faced God do I pray, the Purusa who is praised in the Vedantas, the Self which is a mass of bliss, seated in the heart, and by whose greatness the great darkness of ignorance enveloping people rolls away'.

---

## சிதம்பரம்
## டி. நடராஜ தீக்ஷிதர்
## தெய்வீகப் பேரவைக்குப் புனைந்து பாடிய பாடல்.

இராகம்: புன்னாகவராளி  தாளம்: சதுச்ரசாதி திரிபுடை

அவை வாழ அருள் புரிவாய்

(முதல் நிலை)

அவை வாழ அருள்புரிவாய் தில்லை
இறைவா உன் தனைநாடும் தெய்வீகப் பேர் (அவை வாழ)

(நடு நிலை)

தவயோகியும் அனுபவயோகியும்
பல தியாகியும் பற்பலராகியும் கூடும் நல் (அவை வாழ)

(கடை நிலை)

1. சத்தியம் நிலைக்கவும் சாத்திரம் ஓங்கவும்
நித்தியம் செய்வதே இவர்கள் பணி
பத்திசெய் பலன்களை எத்திசையும் சென்று
கத்தினர் கதறினர் கடமையினால் இன்னர் (அவை வாழ)

2. தன்னலம் கருதாத தமிழ் வாழவும்
தானென்று எண்ணாத வேதம் வாழவும்
அன்ப ருள்ளத்தெழும் அறம் வாழவும்
அகிலமெல்லாம் வாழ அனுதினமுனை நாடும் (அவை வாழ)

3. ஒப்புயர் வில்லாத ஒளி விளக்கே
சித்ஸபையில் வாழும் திரு விளக்கே
தப்பனைத்தும் தீர்த் தருள் விளக்கே
இப்புவியில் வாழும் இன்னுயிர்களுக்கே என்ற (அவை வாழ)

சிதம்பரம் ஸ்ரீ சபாநாயகர் கோயில் ஆயிரக்கால் மண்டபத்தில், தமிழ் நாடு தெய்வீகப்பேரவை மகா நாட்டு சிறப்புக் கூட்டம் 17–9–67ல் நடைப்பெற்றது. சிதம்பரம் ஸ்ரீ சபாநாயகர் கோயில் டிரஸ்டியும் ஸ்தானீகரும், சங்கீத ஸாகித்ய வித்துவானும் இசை அமைப்பாளருமான சிதம்பரம், திரு. டி. நடராஜ தீக்ஷிதர், அவர்கள் தெய்வீகப் பேரவைக்குப் புனைந்துபாடிய, பாடல், அதுபெழுது. விழாக்கமிட்டித் தலைவர் திரு. டாக்டர். K. ரெங்கசாமி அவர்கள், ஸ்ரீ டி. நடராஜ தீக்ஷிதர், அவர்களுக்கு பொன்னாடை போர்த்திக் கௌரவித்தார்கள்.

# படகோட்டி

திருமதி. அனந்தலக்ஷ்மி சுப்ரமணியம் அவர்கள், M.A., B.T.
5, விநாயகமுதலி தெரு, சென்னை-1.

காலை நேரம். கடற்கரை ஓரம். சில்லென்று வீசும் குளிர் காற்று என்னைத் தழுவியது. ஆதவன் தோன்றும் அழகில் மயங்கி கரையோரமாய் நடந்து கொண்டு இருந்தேன். அமைதியான சூழ்நிலையைக் கலக்கிக் கொண்டு, அமைதியைக் கிழித்த வண்ணம் பாட்டொலி கேட்டது. திரும்பிப்பார்த்தேன். செம்படவன் ஒருவன் தன் தோணியைக் கட்டிக் கொண்டே பாடிக்கொண்டு இருக்கிறான். கவலை என்பது அறியாதவன் போல் காணப்படுகிறான். பாடலை உற்று கவனித்தேன்.

"படகோட்டி! உன் துடுப்பெங்கே? அதை நீ எடுத்தோட்டிடுவாய்;
மூடவன் என்னால் ஆவதேது? — நீ எனைக் கரைசேர்த்திடுவாயே."

அவன் உற்சாகம் கரைபுரண்டோடியதன் காரணம் தெரிந்தது. தன் பொறுப்பையெல்லாம் ஒருவனிடத்தில் விட்ட செருக்கு அது. கவலையில்லாமல் பாட்டு வெளிவருவதன் காரணம் அது தான்.

இந்தப் பாடலைக் கேட்டவுடன் என் மனப் பறவை எங்கெல்லாமோ சிறகெடுத்துப் பறந்தது. நம் மனித வாழ்க்கையோடு ஒப்பிட்டது என் மனம்: ஏட்டுக் கல்வி பெற்று விட்டோம் என்ற திமிரிலே நடக்கிறோம். விஞ்ஞான உலகில் மண்ணையும் விண்ணையும் வென்று விட்டோம் என ஏமாந்து நாமே கடவுள் என நினைத்து செருக்குற்று நிற்கிறோம். அப்படியிருந்தும், இந்த ஏழை செம்படவனின் மனதில் உள்ள கிளுகிளுப்போ, மகிழ்ச்சியோ, நம் உள்ளத்தில் இருக்கிறதா? இல்லையே; ஏன் என்றால் "நாமே தெய்வம்" என்று நினைத்து விட்டோம். அதனால், நம் தன்னம்பிக்கையாலே நாமே நம் பாரத்தைச் சுமக்க

வேண்டியதாயிற்று. ஆனால் செம்படவன் கெட்டிக்காரன். தன் பாரத்தை வல்லவனிடம் ஒப்படைத்தான் மகிழ்வுடன் வாழ்கிறான்,

நம் வாழ்க்கை படகைச் செலுத்துகின்றானே, அந்தப் படகோட்டி மிகவும் வல்லவன். தானே சிந்தித்து உணரும் மா பெரும் சக்தியை அளித்து விட்டான். இறைவன் என்றுமே மனிதனைக் கட்டுப்படுத்தி தன்னை அறியும்படி ஏதுமே செய்வதில்லை. தனித்து மனிதன் தன் சுதந்திரத்தைப் பயன்படுத்த வேண்டுமே என்று விட்டிருக்கிறான். முழு உரிமை கொடுத்த தன் காரணம் என்ன தெரியுமா? இறைவனுக்கும் மக்களுக்கும் இடையிலே, ஆண்டான் அடிமை பாவத்துக்கே இடமில்லை. காதலர் ஒருவரோடு ஒருவர் இணைவது போலத்தான் நம்மிருவர் தொடர்பும். அப்பொழுதுதான் நம் அன்பும் வெளிப்படும்; இச்சா சக்தியின் ஆற்றலும் வெளியாகும். நாம் என்னதான் அவமதித்துத் தூற்றினாலும் சரி, மதித்துப் போற்றினாலும் சரி, இறைவன் சிறிதளவாவது கவலைப்படுகிறானா இல்லையே! நாமாக உணர்ந்து அவனை ஏற்கிறோமே தவிர, – நம் அன்பு அல்லது பக்தியினால் மனமுவந்து ஏற்கிறோமே தவிர, அவனுக்காக எனச் செய்யவில்லையே! ஆண்டவனை மன்னாதி மன்னனாக இருந்தாலும் சரி, கொடுங்கோலோனின் ஆட்சியாவது ஒன்றும் அசைக்க முடியாது. ஆனால் அவன் அன்பு என்னும் எளிய பக்தரின் பரிசுக்குத் தான் அசைந்து கொடுக்கிறான்.

உலகத்தில் உள்ள எண்ணற்ற மனித கூட்டம், செய்யாத பாவச் செயல்கள் என்ன? அநீதிகள் என்ன ? அப்பொழுதெல்லாம் ‘இறைவன் என்பான் ஒருவன் இல்லையா ?” என்ற கேள்வி அடிக்கடி தோன்றுகிறதே! எல்லா அறிவும், எல்லா இயக்கமும், எல்லாப் பொருளும் எல்லா வடிவும், எல்லாந் தானேயாகி இருக்கின்றானே. அவன் நம்மை கவனியாது இருப்பானா? இறைவன் எங்கேயும் ஒளிந்து கொண்டு இருக்கிறான். “மனிதன் தன்னால் ஆன முயற்சியைச் செய்யட்டுமே” என்று அமைதியாய் இருக்கின்றான். குழந்தை தானாக நடக்க முயலும்போது வேடிக்கை பார்க்கும் தாயின் நிலையது. மனிதன் உள்ளத்தில் இருந்தும் இராது இருக்கின்றான். அதன் பலனாக, இன்பம் வரும்போது இறைவன இருப்பதாக எண்ணி மகிழ்கிறோம். துன்பம் வந்தபோது அவன் இல்லையே என ஏங்குகிறோம்.

இப்படி இருள் பாதையில் கண்மூடித்தனமாகச் செல்லும் மனித இனத்தில் ஒருசிலர்க்கு - விரல்விட்டு எண்ணலாம் - அவர்களின் கண்களில் மட்டும் ஒளி பாச்சப்படுகிறது. பகை, பொய், மடமை, பாவம் எல்லாவற்றையும் கடந்து பிறகு ஆண்டவனைக் காணமுடிகிறது. சிந்தயைக் கலக்கும் தீய எண்ணங்கள் அகன்ற பிறகு, தன் இலட்சியத்தை அடைகிறான். அப்பொழுது, சிந்தையோடு சிந்தை ஒன்றாக கலக்கின்றன. அன்போடு, அன்பு சேருகிறது. இன்பத்தோடு இன்பம் பொருந்துகிறது.

இத்தகைய கலப்பின் காரணமாகத்தான் பெரிய அடியார் கூட்டமே தோன்றுகிறது. அன்பர்களை வாழ்விக்க, ஆட்கொள்ள எத்தனை செய்கிறான்; சுந்தரரைத் தடுத்தாட்கொண்டான் அந்தணராகி, அப்பரை ஆட்கொண்டானே, நல்ல நோய் கொடுத்து. மூன்றுவயது பாலகனை தன் குழந்தையாய் வளர்க்கத் துணிந்தானே; கழல் காட்டி ஆட்கொண்டான் மணிவாசகரை; இங்ஙனம், மறையில் ஈறும் முன் தொடர் ஒணாத இறைவன் - ஏனை நாடரும் அறிய ஒணாத இறைவன் - இவ்வடியாரை இனிதாய் ஆட்கொண்டான் எனில் எத்தனை சிறப்பு எத்தனை பெருமை.

இறைவனால் அறிவு பெற்ற உயிர்கள் தான் முன்பு செய்த இழிசெயலை எண்ணி ஏங்குகின்றன. அவை, தன் கட்டுக்கடங்காத மனதை எப்படி பழிக்கின்றன! உலகை எப்படி வெறுக்கின்றன?

"வாழ்கின்றாய்; வாழாத நெஞ்சமே! வல்வினைப்பட்டு
ஆழ்கின்றாய்; ஆழாமல் காப்பானை ஏத்தாதே
சூழ்கின்றாய் கேடுஉனக்கு: சொல்கின்றேன் பலகாலும்
வீழ்கின்றாய், நீ — அவலக்கடலாய வெள்ளத்தே"

(திருவாசகம்)

என்று மனதை இடித்து அடக்குவது அன்பர் நெஞ்சம். தங்கள்பால் கொண்ட தற்பெருமை - தன்னை விட்டால் இங்கு யாருமில்லை என்ற செருக்கு இவையெல்லாம் வெள்ளத்தில் இட்ட உப்புக் குவியல், மறைந்து விடுகின்றன. தன் பெருமை தாழத் தாழ இறைவன் பெருமைதான் குன்றுபோல் உயர்கிறது. அப்பொழுது நம் உள்ளம் நம்மையறியாமல்,

ஈசனே! என் எம்பெருமானே!
எந்தை பெருமான்: என் பிறவி

நாசனே'' என்றெல்லாம் நம்மை ஆண்டவனைப்போற்றி,
''நான் யாதும் ஒன்று
அல்லாப் பொல்லா நாயான
நீசனேனை ஆண்டாய்க்கு
நினைக்கமாட்டேன் கண்டாயே''
என்று நன்றி வெள்ளத்தில் மூழுகுகிறது.

பெற்றுவிட்டோம் பெறுதற்கரிய பரிசை. இனி நம்மைப் பற்றிய கவலை தேவை இல்லை. ''நாமார்க்கும் குடியல்லோம் நமனை அஞ்சோம்'' என்ற வீரவாழ்வு நம்முடையது. இறைவனைச் சிக்கெனப் பிடித்தோம் எனில் இனி இரண்டறக் கலந்து விடலாம். கலநதபின் இறைவனைத் தேடவேண்டியதே இல்லை. எந்த மூடவனுனாலும் ஆற்றைக் கடக்க நல்ல படகோட்டி வந்தானுனல் கவலையில்லையே! அப்பொழுது நாம் ஆர்ப்பரிக்கிறோம்.

''புன் புலால் யாக்கை புரைபுரை கனிய
பொன் நெடும் கோயிலாப் புகுந்தென்
என்பெலாம் உருக்கி எளியையாய், ஆண்ட
ஈசனே! மாசிலா மணியே!
துன்பமே, பிறப்பே இறப்பே மயக்காம்
தொடக்கு எல்லாம் அறுத்த நல்சோதி!
இன்பமே! உன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கு எழுந்தருளுவது இனியே.''
நம்மைப் பிடித்தவனையே நாம் கேட்டு மகிழ்வோம்.

சிக்கென நம்மைப் பற்றிய இறைவன், இரண்டறக் கலக்கின்றுன் நம்மோடு. உள்ளம் எனனும் ஆற்றை, இறைவனின் பேருள்ளமாம் கடல் கூவி அழைத்துக், கலக்கும் போது, ஆறு வேறு, கடல் வேறுய் நினைப்பதில்லை. இரண்டறக் கலந்து விடுகின்றன சங்க முகத்தில். அப்பொழுது நாம் ஒன்றை உணர்கிறோம் - இந்த உயிர் நமக்காகப் படைக்கப்பட்டது அல்ல; தனக்காகப் படைத்துக் கொண்டது என்பது அந்த உண்மை. இந்தக் கருத்தைப் படிக்கும்போது மேனுட்டு கவிஞரின் உள்ளம் கவரும் அறிவிப்புதான் நினைவுக்கு வருகிறது.

''Thou hast need of thy nearest creature;
Thou hast need of what once was thine;
The thirst that consumes my spirit
Is the thirst of thy heart for mine''

அந்தப்புலவர் "நீ படைத்த இந்த இழிந்த உயிரும் உனக்கு உதவவே படைத்தாய்! முன்பு ஒரு சமயம், உன்னிடம் இருந்ததுதான் அது. என் உள்ளத்தில் தோன்றும் தாகமும் உன் உள்ளத்தில் தோன்றியதுதான்" என்று தன்னையே இறைவனுக்குக் கொடுத்துவிட்டார்.

இங்ஙனம் நெடுங்காலமாக இறைவனுடன் இரண்டறக் கலக்க முனைகிறார்கள். கலந்தார் துதிப்பாட்டுகள் தான் எத்தனை! உலகத்தில் பிறப்பு - இறப்பு, அழுகை - சிரிப்பு, முயற்சி - சோர்வு, நம்பிக்கை - அவநம்பிக்கை இவை இருந்தும் அந்தி நேரமும், காலையும் வணங்குகிறோமே! இறைவனை வணங்கும் அந்த இனபக் குரல், கதிரவன், நிலவினை விண் மீன்களின் ஒளியிலும், தீயின் வெம்மையிலும், இன்னிசையிலும், இறைவனுக்காகத் தொடுத்த பூமாலையிலும், நா பயிலும் துதிப்பாடல்களிலும் அல்லவா எதிரொலிக்கிறது! "என் உள்ளத்திலூறும் அன்பினில் இணைபற்று கலப்பாய்" என்றல்லவா மனித உள்ளம் கூறுகிறது! மொத்தத்தில் இறைவனை தர்க்கம், வாதம்,விவாதம் இவற்றால் நிச்சயமாக உணரமுடியாது. எங்கும் நிறைந்த அன்பால் உணரலாம். குழந்தை தன் தாய் தந்தையரை உணர்வது போல் அநுபவ அறிவால் உணரலாம்.

ஆகவே, அந்தப் படகோட்டியை நம்பி வாழ்க்கைக் கடலினைக் கடக்க முயல்கிறோம; அப்பொழுது நம் உள்ளம் இறைவனை நோக்கி வேண்டுவதெல்லாம் இவ்வளவு தான்; யாவற்றிலும் உள்ள பரம் பொருளே; மகிழ்ச்சி ஊற்றெடுக்க அருள் புரிவாய்; நீ எங்களிடம் தோன்றிடுவாய். எங்கள் உள்ளத்தில் சிவம் வாழ வழி வகுப்பாய். உன் பெருமையை உணராது துயருற்றது போதும். இனியேனும் சிறுமை உணர்வினின்றும் துயரிலிருந்தும் காப்பாய்; பேராசை, சினம், இவற்றில் சிக்காது கடந்து மனித சமுதாயமாம் பெருங்கோயிலில் உன்னை வழிபடும் தொண்டராய் இருந்தால் போதும். உன்னை உள்ளூரப் பணிந்து வணங்குகிறோம். எங்களை ஏற்றருள்வாய் இறைவா!" என்று மன்றாடுகிறோம். அப்பொழுது கெஞ்சலும் மன்றாடலும் வல்லான் காதல் படுமானால் ..........."

---

# ஞானப்பழம்

புலவர், திரு. வே. அரசு அவர்கள்,
தமிழாசிரியர், எளச்சிபாளையம்.

(மலர் 18, இதழ் 9. பக்கம் 445ன் தொடர்ச்சி)

---

ஆயிரங் கோடி காமர் அழகெலாம் திரண்டொன் ருகி
மேயின எனினும் செவ்வேள் விமலமாம் சரணம் தன்னில்
தூயநல் எழிலுக் காற்ரு தென்றிடின் இணைய தொல்லோன்
மாயிரு வடிவிற் கெல்லாம் உவமையார் வகுக்க வல்லார்?

-என்று இவ்வாறு பெரும் சிறப்பும் அழகும் உடைய தெய்வம் நீ — எல்லாத் தெய்வங்கட்கும் மேற்பட்ட மூலகாரணன் நீ, என்பதை நான் இதுவரையில் உணரவில்லை. மூலகாரணமான பெருந்தெய்வமான உன்னைச் சூழுதல் வேண்டும் தாள்கள் - என்னுடைய கால்கள் உன்னைச் சுற்றிப் பலமுறை வலம் வருதல் வேண்டும்; என்னிரு கரங்களும் ஒன்ருகச் சேர்த்து குவிந்து உன்னைத் தொழுதிடல் வேண்டும்; என தலை உன் பாதத்தின் கீழ்த் தாழ்ந்து வணங்கவேண்டும்; என் நாக்கு எப்பொழுதும் உன் புகழைச் சொல்லித் துதிக்க வேண்டும்; எனக்கு ஏற்பட்டிருக்கும் தீமைகள், என்னைச் சூழ்ந்திருக்கும் துன்பங்கள் எல்லாம் அகன்று, நான் இவ்விறைவனுக்குத் தொண்டருக — அடிமையாக ஆகி வாழுதல் வேண்டும் என்றெல்லாம் எண்ணினன்.

சூழுதல் வேண்டும் தாள்கள்; தொழுதிடல் வேண்டும் அங்கை;
தாழுதல் வேண்டும் சென்னி; துதித்திடல் வேண்டும் தாலு;
ஆழுதல் வேண்டும் தீமை அகன்றுநா னிவர்க்கா ளாகி
வாழுதல் வேண்டும் நெஞ்சம் தடுத்தது மானம் ஒன்றே.

இவ்வாறு, முருகவேளின் உருவு அழகிலே மயங்கி அவருக்குத் தொண்டு செய்ய எண்ணிய சூரபதுமனுக்கு முருகன் தாம் அளித்திருந்த ஞானத்தை அகற்றினர். கோல மயில் முருகன் - பாதபங்கயமும் திருமுகமாறும் பன்னிருகரங்களும் மருங்கில் கிதகிண்கிணியும் - கொண்டு விளங்கிய

முருகன் மறைந்து,போர்புரியும் முருகனுகக் காட்சி கொடுத்தார். காயோ, கனியோ, அறுசுவை உணவோ - எது சாப்பிட்டாலும் நாக்கு மட்டுமே அதன் சுவையை உணர்கிறது. தொண்டை யைத் தாண்டி அப்பால் அப்பொருள் சென்று விட்டால் ஒன்றுமே உணரமுடிவதில்லை. அதுபோலவே, மாமயில் வாகனன், கார்த்திகேயப்பெருமான், தந்தைக்கும் உபதேசித்த ஞானகுருபரன் எழில்மிகு காட்சியையும், ஞானத்தையும் மறைத்தவுடனே, இதுவரையிலும், ஞானப்பழத்தின் சுவை கண்டு மகிழ்ந்து இன்புற்றுக் கந்தவேளின் அடிக்கமலத்தில் வண்டாக மொய்த்திருக்க விரும்பிய சூரபதுமன் அஞ்ஞான மேலிட்டால் வேல் தாங்கிய வேலவனைப் பகைத்தான். இந் நாள் வரையிலும் நடந்த போரில் சகோதரர்களையும், மக்களை யும், உறவினர்களையும், பல்லாயிரம் வீரர்களையும் இழந்த பிறகு தன் ஒருவனையும் தவிர மற்றெல்லோரையும் கொன்றழித்த பகைவனுக்கு அடிமையாகி வாழுதல் தகுமோ? அப்படி சரண் புகுந்து வாழ்ந்தால் உலகம் எனைப் பழிக்குமே.

ஆயிரத்தெட்டு அண்டங்களையும்,நூற்றெட்டு யுகங்களாக அரசாண்டு தெய்வங்களும் அஞ்சும் வலிமை பெற்ற நான் போரிடாவிட்டால் மானமில்லாதவன் என்று உலகம் பழிக்குமே, என்னசெய்வது? வாழவேண்டும் என்ற ஆசையிருக்கிறது. ஆனால் மான உணர்ச்சி தடுக்கின்றதே.

வாழுதல் வேண்டும் நெஞ்சம், தடுத்தது மானம் ஒன்றே. என்பதனுல் - மானத்தை இழந்து வாழவிரும்பாத சூரன் - "மானம் இழந்த பின் வாழாமை முன்னினதே" - என்பதனுல் பழைய பகையையும் சினத்தையும் உடையவனுனுன்; போரிட் டான்; முருகனுல் வெல்லப்பட்டான்; கூறுடலம் இரண்டாகக் கொல்லப்பட்டான். அழிவற்ற ஆயுள் பெற்ற சூரபதுமன் சேவலும் மயிலுமானுன். அதுகண்டு மகிழ்ந்த சரவணபவன் சேவலைக்கொடியாகவும், மயிலை ஊர்தியாகவும் ஏற்று அருள் புரிந்தார்.

பகைவனுகிய - மாறுபடு சூரனுக்கும் கூட ஞானமளித்து அருள்புரிந்த இறைவன் ஆறுமுகன் - ஞானப்பழமாகிய அழ கன் - தன்னை வேண்டுகின்றவர்களுக்கும், தன்னை வேண்டாத

வர்களுக்கும் கூட அருள் புரிந்திருக்கின்றூர். ஔவையார், பொய்யாமொழிப்புலவர், குமரகுருபர சுவாமிகள், அருணகிரி நாதர் போன்ற நல்லோர்களின் வாழ்வெல்லாம் அப்பெருமானது ஞானப்பெருமையால் சிறந்தனவேயாகும். இவைமட்டுமல்ல; ஞானபண்டிதராகிய சுவாமி - ஞானப்பழத்தைத் தம் தந்தைக்கும் உண்ணக்கொடுத்து - பிரணவப் பொருளை உபதேசித்துத் தகப் பன்சாமி ஆனதும் ஆகிய இவைகளை எலலாம் சிறிதளவு தொட் டுக் காட்டத் தொடங்குகின்றேன்.

காட்டிலே காரெருமை மேய்க்கின்ற பாலகனுய்க்
கோட்டிலுயர் நாவற் கனியீந்துஎன் அன்னுய்!
புசிததென்னைப் பாடுக என்றிட் டறிவுப்
பசிதீர்த்த ஞானப் பழம்.

ஔவையார் சிவபெருமானையும், விநாயகப் பெருமானையும், முருகனையும் பாடியுள்ளார். ஔவையின் அகன்ற, ஆழ்ந்த, விரிந்த அறிவை உலகத்திற்குத் தெரியப்படுத்த வேண்டும் என்பது குழந்தை கந்தவேளின் ஆசை. ஒருநாள், ஔவையார் காட்டுவழியிலே களைத்து இளைத்துச் சோர்நது நடைதள்ளாட வந்துகொண்டிருந்தார். வழியிலே ஒரு நாவல்மரம். மரத்தின் கீழ் - நிழலிலே - களைப்பாற்றிக் கொள்ள வந்தமர்ந்தார். மரத் தின்மேல் அழகும், இளமையும், செமமேனியும் கொண்ட சிறுவன் ஒருவன் அமர்ந்திருந்தான. அவன் இடைச்சிறுவன எருமைகள் எல்லாம் பக்கத்திலே மேய்ந்து கொணடிருந்தன. களைத்துச் சோர்நது வருந்தி அமர்ந்துருந்த ஔவையைக் கண்ட சிறுவன, "பாட்டி! காடுமேடெல்லாம் கடந்து நடந்து வந்து மிகவும் களைத்துப் போயிருக்கிருய் போலிருக்கிறதே. களைப்பும, பசியும் போக்கிக் கொள்ளச சிறிது பழம் பறித்துப் போடட்டுமா?" என்றுகேட்டான். ஏதோ சில பழங்களைச் சாப் பிட்டாவது பசியைப் போக்கிக் கொள்ளலாம என மெண்ணிய ஔவையார், "எனக்கும் சிலபழங்களைப் போடப்பா - பசி அதிக மாயிருக்கிறது. சாப்பிட்டுப் பசியாறுகிறேன" - எனருர். உடனே சிறுவன், "பாட்டி! உனக்குச் சுட்டபழங்கள் வேண்டுமா? சுடாத பழங்கள் வேண்டுமா? சொல்" என்ருன்.

பழங்களில் கூடச் சுடுவதும் சுடாததுமான பழங்கள் உண்டா? சுட்டபழமாயிருநதால் ஆறியபிறகல்லவா சாப்பிட

வேண்டும். சுடாத பழமே கேட்டு உண்போம் என்றெண்ணித் "தம்பி! சுடாத பழமே போடு" - என்றார். சிறுவனாகிய முருகனுக்கு மனத்துக்குள்ளே மிக்க மகிழ்ச்சி. நாவல் மரக்கிளைகளைப்பிடித்துப் பலமாகக் குலுக்கினான். நன்றாக முதிர்ந்து கனிந்த பழங்கள் கீழே விழுந்தன; அதனால் பழங்களில் அடி பட்டு அவை உடைந்தன; அவைகளில் மணல் ஒட்டிக்கொண்டிருந்தன. ஔவையார், அப்பழங்களை எடுத்துவாயினால் மணல் போக ஊதி ஊதிச் சாப்பிட்டார். வேலவன் ஔவையைப் பார்த்துப் "பாட்டி, பழங்கள் அதிகமாகச் சுடப்போகின்றன. நன்றாக ஊதிச்சாப்பிடு" - என்றான். ஔவை திடுக்குற்றார். அவர் அறிவிலே பொருள் தட்டுப்பட்டுவிட்டது. கனிந்த பழம் சுட்டபழம்; கனியாத காய் சுடாதபழம். அந்தோ! எவ்வளவு படித்துப் புலமை பெற்றிருந்தாலென்ன? காட்டிலே காரெருமை மேய்க்கின்ற இந்த இடைச்சிறுவனுக்கு நான் தோற்றுப் போனேனே" என்றெண்ணி வருந்தினார்.

---

(தொடரும்)

# ஆறும் நூறும்

ஆறு என்ற எண்ணினையும், நூறு என்ற எண்ணினையும் பல இடங்களில் இணைத்துக் கூறுதல் தமிழ்மொழியில் வழக்கமாக உள்ளது. ''நூறு குழிக்கு ஆறுகுழி போதும்'. என்பது, வேளாண்மைத் தொழிலிலே வழங்கும் ஒரு பழமொழி' 'நிலத்தில் தக்கபடி உழைத்துப் பயிர் செய்யாமல், பேருக்கு நூறுகுழி பயிர்செய்வதைவிட, நன்ருக உழைத்து ஆறுகுழி பயிர்செய்வது நலம்' என்பது இப்பழமொழியின் பொருள். இஃது ஏர்க்களப் பழமொழி.

இவ்வாறே போர்க்களத்தில் செல்லும் வீரர்களிடையேயும் வழங்கும் பழமொழி ஒன்று உண்டு. ''தண்டில் போனல் இரண்டில் ஒன்று'' என்றபடி, போருக்குச் செல்பவர் பகைவரை வென்று வாகைமாலை சூடுதல். அஃது இல்லையேல் உயிர் கொடுத்துப் புகழ்கொண்டு வீரசுவர்க்கம் சேர்தல் என்ற இரண்டில் ஒன்றே செய்யத்தக்கது. இவைதவிர மூன்ருவதாகப் புறங்காட்டித் திரும்புதல் என்பது இல்லை. பகைவன் வெல்ல முடியாது உயிர்கொடுக்கும் நிலைவருமாயின், அவர்கள் அது குறித்து 'இறப்பு, ஆறிலும் உண்டு, நூறிலும் உண்டு' என்று சொல்லி, உடம்பின் நிலையாமையையும், புகழின் நிலைபேற்றை யும் நினைவு கூர்ந்து வீரத்துடன் போரிடுவர். இப்படி ஆறும், நூறும் சேர்த்துச் சொல்லப்படும் இடங்கள் சில உள. அம் முறையில் திருமூலர் தமது திருமந்திரத்தில் ஒரு கருத்தை அருளுகின்ருர்.

''ஆறு பறவைகள் ஐந்தகத் துள்ளன;
நூறு பறவை நுனிக்கொம்பின் மேலன;
ஏறும் பெரும்பதி ஏழும் கடந்தபின்,
மாறுத லின்றி மனைபுக லாமே''

என்பது அத் திருமந்திரம். இதில் 'ஆறு பறவைகள், நூறு பறவைகள்' என்பன எவை? 'காமம், குரோதம், உலோபம்,

இக்கட்டுரை 'ஞானசம்பந்தம்' ஆசிரியர் அனுமதி பெற்று பிரசுரிக்கப்படுகிறது.

மோகம், மதம், மாற்சரியம்' என்னும் ஆறு குற்றங்களே ஆறு பறவைகள். ஐந்து அகம், பஞ்சபூதங்களாலாகிய உடம்பு. இந்த உடம்பாகிய அகத்தில் - இல்லத்தில் உயிர் குடியிருக்கின்றது' ஆனால், இந்த இல்லம் அந்த ஆறு பறவைகள் மறைந்து வசிப்பதற்கு உரிய பாழ்மனையேயன்றி, உயிர் எப்பொழுதும் தங்கி நல்வாழ்வு வாழ்வதற்குரிய நல்லகம் அன்று. ஆதலால், இதில் தங்கியிருக்கின்ற உயிர், அந்தப் பறவைகள் வந்து தன்னைக் கொத்தித் தின்ன மிகவும் துன்பத்திற்கு ஆளாய் இடர்ப்படுகின்றது.

இவற்றிற்குமேல் இன்னும் நூறு பறவைகள் இருக்கின்றன. அவை மரத்தின் நுனியில் இருக்கின்றன. நூறு பறவைகளாவன, உயிரினிடத்து உண்டாகின்ற பலவகையான இச்சைகளும், அவற்றின் வழியே தோன்றுகின்ற எண்ணங்களுமாகும். எண்ணங்கள் தோன்றுவது புருவ நடுவில்தான் என்பது சாத்திரங்களின் முடிவு ஆறு ஆதாரங்களில் புருவ நடு ஆறாவதாகச் சொல்லப்படும். ஆசையால் அது நுனிக் கொம்பாகிறது அங்கு உண்டாகின்ற எண்ணங்கள் பறவைகளாகின்றன. உயிர், தான் என்றும் நிலைத்து வாழ்வதற்குரிய நன்மனை 'வீடு' என்கின்ற முத்திநிலையேயாம்.

'ஆறும், நூறுமாகிய பறவைகள் எப்பொழுதும் இருந்து தொல்லைப்படுத்துகின்ற இந்த பாழ்மனையை விட்டு வீடாகிய நன்மனையை உயிர் அடைய வேண்டுமாயின், ஏழு பெரிய ஊர்களை அது கடக்கவேண்டுமாம். ஏழு பெரிய ஊர்கள் எவை? ஆறு ஆதாரங்களும், அவற்றிற்கு மேலே உள்ள பிரமரந்திரமுமாம். ஆறு ஆதாரங்களாவன, 'மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அனாகதம், விசுத்தி, ஆக்ஞை' என்பன: இவை, ஆசனத்திற்கு மேல் உள்ள இடம். அதற்கு மேலும், உந்திக்குக் கீழும் உள்ள இடம் உந்தி, இருதயம், கண்டம், புருவநடு என்னும் இடங்களாம். இதற்கு மேலே உள்ள பிரமரந்திரத்தையும் ஆதார யோக முறையால் கடந்து, நிராதார யோக முறையிலே தலைக்குமேல் பன்னிரண்டங்குலமாகிய துவாதசாந்தப் பெருவெளியில் கலப்பதே வீடுபேறு.

(தொடர்ச்சி அடுத்த பக்கம் பார்க்க)

# HYMNS OF THE TAMIL SAIVITE SAINTS

BY
F. KINGSBURY, B. A. (Madras)
AND
G. E. PHILLIPS, B. A. (Lond.), M. A. (Oxon.)

---

[மலர் 18, இதழ் 9-ன் தொடர்ச்சி]

## IV

## MANIKKA VASAHAR

(Sanskrit form MANIKYA VACHAKA)

84. வானாகி மண்ணாகி வளியாகி யொளியாகி
ஊனாகி யுயிராகி யுண்மையுமா யின்மையுமாய்க்
கோனாகி யானெனதென் றவரவரைக் கூத்தாட்டு
வானாகி நின்றாயை யென்சொல்லி வாழ்த்துவனே.

84 The sky, earth, wind, the light, our very flesh and life art Thou
Being art Thou, non-being too, Thou king, who see' st how
Men dance like puppets with their foolish thoughts of 'I' and Mine,'
While Thou the cords dost pull. What words can tell Thy praise divine?

(To be continued)

---



---

(முன்பக்கத்தொடர்ச்சி)

அதனையே, 'ஏறு பெரும்பதி ஏழும் கடந்தபின்-மாறுதலின்றி மனைபுகலாமே' என்கின்றார் திருமூலர். அவர் இந்த யோகமெல்லாம் கைவரப்பெற்றவராகலின், 'நான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' என்று அவர் அருளிச்செய்த இதனை அனைவரும் அறிந்து பயன்பெறுவோமாக.

உ

திருச்செந்திலாண்டவன் துணை

# திருவாசக அநுபூதி உரை*

(சீகாழித் தாண்டவராயர் அவர்கள் இயற்றியது)

திருச்சிற்றம்பலம்

## வாழாப் பத்து

இனி, வாழாப் பத்தாவன:—

பொழிப்புரை:— முற்பதிகத்தில் அருளிய திருவருளில், அபேதக் காட்சியால் பொருளும் பேச்சும் வேறின்மையான கருணையை வியந்து இன்பு அன்பு நீங்காமல், ஒன்றிரண்டென்ற கொள்கைக்குளதாகிய அத்துவித அன்பு முத்தியே திருவடி ஞானத திருவருள் வாழ்வென அருளியதைக் காண்க.

ஆசிரிய விருத்தமாகத் திருப்பெருந்துறையிலோதிய தெனக்காண்க.

446. இனி, மற்றுப் பற்றெனக்கின்றி நின் திருப்பாதமே பரமென்ற (தி.-ன.):—

பாரொடு விண்ணுய்ப் பரந்தவெம் பரனே
பற்றுநான் மற்றிலேன் கண்டாய்
சீரொடு பொலிவாய் சிவபுரத் தரசே
திருப்பெருந் துறையுறை சிவனே
ஆரொடு நோகே னூர்க்கெடுத் துரைக்கேன்
ஆண்டநீ யருளிலை யானுல்
வார்கட லுலகில் வாழ்கிலேன் கண்டாய்
வருகவென் றருள்புரி யாயே.

(இ-ள்). ஆண்டவனே! தேவரீர், பாராயும் வானமாயும், அவைக்குப் பிரேரகராயும், அவற்றில் சருவ வியாபகராயும், இருப்பதான பரமசிவனே! நின் திருவடியே கதி; மற்றுப் பற்றெனகில்லை; என் திருவுள மறியாயோ? சிவஞானச் சிறப்புள்ளோய்! சிவபுரத்தரசே! திருப்பெருந்துறை வாழும் சிவகுருவே! அநாதியே அறிவிலாத எனக்கு அறிவு கொடுத்து அடிமையாக்கி, திரும்பத் கற்சுட்டறியாமையால் உளதானதைத் திருவருளால் திருவருட் பணிக்கடிமையாக, சிவஞானமே பொருளென, எற்கேற்ப அருளாவிடில் அடியேன் குறையைச் சொல்வதற்கு வேறொரு கடவுளருளரோ? இப்பூமியில் எவ்வகை இன்பமுறுவேன்? அடியேனை ஏவல் புரிந்தருள வேண்டும்—என அருளியதைக் காண்க.

---

* இவ்வரிய நூலைப் பதிப்பித்த சென்னை-திருவான்மியூர், மகாமகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாதையர் அவர்கள் நூல் நிலையத்தாரின் அநுமதிபெற்று இது வெளியிடப் பெறுகின்றது. இதன் விலை ரூ. 15/- அந் நூல் நிலையத்திலிடைக்கும். 20% கழிவு உண்டு.

## விமர்சனம்

# 'ஞானகுரு'

### 33வது ஆண்டு சிறப்பு மலர்

மதுரையிலிருந்து மாதம் தோறும் வெளிவரும் 'ஞானகுரு'வின் சிறப்பு மலராக ஸ்ரீ சங்கரர் ஜெயந்தி புனித நாளில், ஜயந்தி மலராக பிரசுரிக்கப்பெற்றது. கிடைக்கப் பெற்றோம். இதில், மதுரை ஆதீன கர்த்தர் ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர ஸ்ரீ ஞானசம்பந்த தேசிக பரமாசாரிய சுவாமிகள், திருமுருக கிருபானந்த சுவாமிகள், கவிராஜ பண்டிதர் ஸ்ரீ ஜெகவீர பாண்டியனுர், மற்றும் தமிழாசிரியர்கள், புலவர்கள், எழுத்தாளர்களின் கதை. கட்டுரை, கவிதை முதலியனவும், சுவாமி சிவானந்தஜி, சுவாமி ராம்தாஸ், சுவாமி சித்தானந்தர், முதலியவர்களைப்பற்றிய வரலாற்றுக் குறிப்புக்களும் அடங்கியுள்ளது.

மயக்கம். மடமை. மனச்சஞ்சலம், மாயை, மரணம். ஆகியவைகளை விளக்கி, 'இருந்ததனை, இருந்தபடி, எடுத்துக்காட்டும்' ஞான பாதமாகிய மோனநிலையான சின்முத்திரை காட்டி உபதேசிக்கின்ற ஸ்ரீ தக்ஷுண மூர்த்தியின் படத்தை முகப்பில் காணலாம்.

ஸ்ரீ ஓங்கார விநாயகமூர்த்தி. திருச்செந்தூர், திருமுருகன், கிருஷ்ண அர்ச்சுனர் – இவர்களின் கண்கவர் படங்களும் இம்மலரை அலங்கரிக்கின்றன. முக்கியமாக, இந்த மலரில், யோகக்கோர்வை, கல்வியின் நோக்கம், அரவிந்தரின் பூரண யோகம், தேன் சுவை மேவும் தெய்வத்திருவாசகம், நிமிஷ ஜோதிஷ நிபுணர், முதலான எழுத்தோவியங்கள் வாசகர்களின் ஊன்றிய கவனத்துக்கு சிறப்பாக உரியனவாகும். இவ்வரிய சிறப்பு மலரை வெளியிட்டிருக்கும், 'ஞான குரு' ஆசிரியர் ''அத்யாத்மரத்ன'' ஸ்ரீ S. G. இராமலிங்கம் B, A., அவர்களின் சிறந்த பணி மிகவும் பாராட்டற்குரியது.

[ இதன் கிரயம் ரூ. 3–00. ]

கிடைக்குமிடம் :—

ஆசிரியர் 'ஞானகுரு',
65 A. கான்பாளையம் முதலாவது தெரு,
மதுரை–9.

## சிதம்பரத்தில் ஸ்ரீகுமரகுருபரசுவாமிகள் நினைவு கோசம்வர்த்தன நந்தனவன நிதி நிலப்பெறுமானம் ரூ. 30,000/-

"திருமகள் அகலாப் பரம வைகுந்த
நன்னகர் உதித்த செந்நெறிக் குரிசில்
ஐந்தெனும் பருவம் வந்துறும் அளவும்
மழக்குணம் ஒருவி மிழற்றிடாச் செம்மல்
செந்திலம் பதிவாழ் கந்தன தருளால்
ஒதா துணர்ந்த போதகுய் முன்னர்க்
கலிவெண் பாவெனும் ஒலிபெரும் அலங்கல் அக்
குகன்றிரு வடிதனக்கு உகந்திடச் சூட்டி"

இளமையில் துறந்து தருமபுரம் ஸ்ரீலஸ்ரீ மாசிலாமணிதேசிக ஞானசம்பந்த பரமாச்சாரிய சுவாமிகள்பால் துறவுநிலை யேற்றுச் சிதம்பரம் சென்று அனுதினமும் தில்லைக்கூத்தப்பிரானைத் தரிசித்துக் கொண்டு தம்புலமை தோன்றச் சிதம்பர மும்மணிக் கோவை, தில்லைச் சிவகாமியம்மை இரட்டைமணிமாலை, சிதம்பரச் செய்யுட்கோவை ஆகிய நூல்களைப் பாடிச் சிதம்பரத்தில் தாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம் என்று கருணைத் திறம்பூண்டு,

'கூற்றிருக்கும் அடலாழிக் குரிசில்முத லோரிறைஞ்சக்
கொழுந்தேன் பில்கி
ஊற்றிருக்கும் தில்லைவனத் தசும்பிருக்கும்
பசும்பொன் மன்றத் தொருதாள் ஊன்றி......
கொண்டல்ஒடுங் குழற்கோதை யோடும் கறைக்
கண்டன் ஆடுந் திறம்காண்மினே காண்மினே'

என்று மன்பதைகளைத் தில்லைக் கூத்தனைத் தரிசிக்கும்படி ஆற்றுப்படுத்தித் தில்லையில் தங்கியிருந்த ஸ்ரீ குமரகுருபரசுவாமிகள் அருட் செயலை நினைவுகூர்ந்து போற்றித் தில்லையில் ஸ்ரீ குமரகுருபரசுவாமிகள் நினைவாகப் பசுக்களைப் போஷித்துத் தில்லை நடராஜப்பெருமானுக்குப் பால் அளிக்கும் பொருட்டும், நந்தனவனம் பராமரித்துப் புஷ்பம் அளித்தற் பொருட்டும் திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து அதிபர் ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி அருள் நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்களால் இத் தருமம் நிறுவப் பெற்றது. இது 'சிதம்பரத்தில் ஸ்ரீ குமரகுருபரசுவாமிகள் நினைவு கோசம்வர்த்தன நந்தனவன நிதி' எனப்பெறும்.

2. நம்பேரில் பட்டா மிராசுடனும் நாம் சர்வ சுதந்திரத்துடன் அனுபவித்து வருகிறதும், கும்பகோணம் தாலுக்கா, 44

சூரியமூலை வட்டம், சூரியமூலை கிராமத்திலுள்ளதும்,இதன் சேர்க்கையில் கண்டிருப்பதும் ஆன நஞ்சை ஏக்கர் 9, செண்டு 20 நிலத்தின் ஆண்டு வருமானத்தில் சர்க்கார் கிஸ்தி மராமத்துச் செலவு, கிராம சமுதாயச்செலவு, நிர்வாகச்செலவு முதலிய செலவினங்கள் போக எஞ்சியுள்ள நிகர வருமானம் தில்லையில் பிற்கண்டவாறு கோசம்வர்த்தனம், நந்தனவனம் முதலிய தருமங்களுக்கெனச் செலவிடப்பெறும்.

3. நம்மால் இதுவரை கோசம்வர்த்தனத்துக்கெனப் பிற்கண்ட தலங்களில் தரும நிதிகள் நிறுவப்பெற்றன.

| | | | |
|---|---|---|---|
| 1. | சுவாமிமலையில் ஸ்ரீ குமரகுருபரசுவாமிகள் நினைவு கோசம்வர்த்தன நிதி | ரூ. | 30,000 |
| 2. | திருச்செந்தூரில் ஷை ஷை | ரூ. | 35,000 |
| 3. | பழையபாவநாசத்தில் அகத்தியர் ஷை | ரூ. | 7,000 |
| 4. | திருவண்ணாமலையில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் | ரூ. | 30 000 |
| 5. | திருவாப்பாடியில் சன்டேசுவரர் ஷை | ரூ. | 7,000 |
| 6. | திருலோக்கியில் சுந்தரர் நினைவு ஷை | ரூ. | 7.000 |

மேற்கண்ட நிதிகளின்படி கோசம்வர்த்தனம் நடைபெற்றுவருவது போல மேலே குறித்த நிலவருமானத்திலிருந்து ஆண்டுதோறும் சிதம்பரத்தில் நமக்குச் சொந்தமான ஸ்ரீ காசிமடம் கட்டிடத்தில் வைத்துப் பசுக்கள் வாங்கிப் பராமரிக்க ரூ.1000/- செலவு செய்யப் பெற்றுவரும். அப்பசு அல்லது பசுக்கள் அளிக்கும் பாலை நாடோறும் காலை மாலை தில்லை ஸ்ரீ நடராஜப் பெருமான் திருக்கோயிலில் இரத்தினசபாபதிக்கும் ஸ்படிகலிங்கத்துக்கும் அபிஷேகம் செய்ய அளிக்கப்பெற்றுவரும்.

பசு, பால் தருதல் நிறுத்தினுல் பசுவையும் கன்றையும் வைத்துக்கொண்டு பராமரிப்பது லாபகரம் ஆயின், வைத்துப் பராமரிக்கலாம். இல்லையேல் அவற்றை விற்றுமுதல்செய்து மீண்டும் பசுவாங்குவதற்குரியதொகையுடன் சேர்த்து மேற்கொண்டு பசுக்களை வாங்கிக்கொள்ளலாம். எந்தக்காலத்திலும் கறவைப் பசு வைத்துக்கொண்டும், நாடோறும் நடராஜப் பெருமானுக்கு முட்டுப்பாடின்றிப் பால் அனுப்பப்பெற்றும் வரவேண்டியது.

4. நம்மால் பிற்குறித்த தலங்களில் அவ்வப்பொழுது ஒல்லும் வகையான் ஒவாதே திருமுறை முதலிய திருப்பாடல்கள் பிற்கண்ட விவரப்படி சிலாசாசனம் செய்து பதிக்கப்பெற்றுள்ளன.

| தலம் | ஆசிரியர் | செய்யுள் முதற்குறிப்பு |
|---|---|---|
| 1. திருச்செந்தூர் | குமரகுருபரர் | பூமேவு செங்கமல - கந்தர்கலிவெண்பா— |
| 2. மதுரை | ௸ | காலத்தொடு கற்பனை |
| ௸ | ௸ | தொடுக்கும் கடவுள் |
| ௸ | ௸ | புழுகுநெய்ச்சொக்கர் |
| ௸ | சம்பந்தர் | மந்திரமாவது நீறு |
| ௸ | திருவள்ளுவர் | திருக்குறள் 1330 |
| 3. திருக்கழுக்குன்றம் | மாணிக்கவாசகர் | பிணக்கிலாத |
| 4. சிதம்பரம் - தில்லை - | ௸ | நமச்சிவாய வாழ்க - சிவபுராணம் — |
| ௸ | சேந்தனார் | மன்னுகதில்லை — திருப்பல்லாண்டு — |
| 5. திருவண்ணாமலை | மாணிக்கவாசகர் | ஆதியுமந்தமுமில்லா — திருவெம்பாவை — |
| 6 காஞ்சிபுரம் — ஏகாம்பரநாதர்ஆலயம் | சுந்தரர் | ஆலந்தானுகந்தானை |
| 7. மயிலாப்பூர் | சம்பந்தர் | மட்டிட்ட புன்னை |
| 8. திருநெல்வேலி | ௸ | மருந்தவை மந்திரம் |
| 9. திருவாரூர் | சுந்தரர் | தில்லைவாழ் அந்தணர் - திருத்தொண்டத் [தொகை |
| 10. திருக்குற்றாலம் | சம்பந்தர் | திருந்தமதிசூடி |
| ௸ | ௸ | வம்பார்குன்றம் |
| ௸ | திருநாவுக்கரசர் | தலையே நீ வணங்காய் |

| | | |
|---|---|---|
| 11. திருப்புன்கூர் | சுந்தரர் | அந்தணாளன் |
| 12. சீகாழி | சம்பந்தர் | தோடுடைய செவியன் |
| 13. திருமறைக்காடு | திருநாவுக்கரசர் | பண்ணின் நேர்மொழி |
| ௸ | சம்பந்தர் | சதுரம்மறை |
| 14. திருவையாறு | திருநாவுக்கரசர் | மாதர்ப்பிறைக்கண்ணி |
| 15. திருப்பனந்தாள் | சம்பந்தர் | கண்பொலிநெற்றியினான் |
| 16. திருவிடைக்கழி | சேந்தனார் | மாலுலாமனந்தந்து |
| 17. அவிநாசி | சுந்தரர் | எற்றான் மறக்கேன் |
| 18. திருவதிகை | திருநாவுக்கரசர் | கூற்றாயினவாறு |
| 19. திருவெண்ணெய்நல்லூர் | சுந்தரர் | பித்தாபிறைசூடி |
| 20. திருமருகல் | சம்பந்தர் | சடையாயெனுமால் |
| 21. சுவாமிமலை | அருணகிரிநாதர் | ஆடும்பரிவேல் — கந்தரனுபூதி முழுதும் — |
| 22. வைத்தீசுவரன்கோவில் | குமரகுருபரர் | ஒழியாத புவனத்து |
| ௸ | ௸ | தருமன்னு பொன்னுலகு |
| 23. திருவோத்தூர் | சம்பந்தர் | பூத்தேர்ந்தாயன |
| 24. திருச்சிராப்பள்ளி | ௸ | நன்றுடையானை |

| | | |
|---|---|---|
| ஷெ | திருநாவுக்கரசர் | மட்டுவார் குழலாள் |
| 25. வடதிருமுல்லைவாயில் | சுந்தரர் | திருவும் மெய்ப்பொருளும் |
| 26. பழநி | அருணகிரிநாதர் | நாதவிந்துகலாதி நமோ நம |
| 27. திருத்தெளிச்சேரி | சம்பந்தர் | பூவலர்ந்தன |
| 28. திருக்கோலக்கா | ஷெ | மடையில் வாளை |
| 29. சாயாவனம் | ஷெ | மண்புகார் |
| 30. திருக்குடமூக்கு | ஷெ | அரவிரிகோடனீட |
| ஷெ | திருநாவுக்கரசர் | பூவணத்தவன் |
| 31. வாரணாசி | சம்பந்தர் | தொண்டரஞ்சு |
| 32. வடதிருவாலங்காடு | சுந்தரர் | முத்தாமுத்தி |
| 33. திருவாப்பாடி | அப்பர் | கடலகம் |
| 34. திருலோக்கி | கருவூர்த்தேவர் | நீரோங்கிவளர்கமலம் |
| 35. ஸ்ரீசைலம் | சம்பந்தர் | சுடுமணி |
| ஷெ | அப்பர் | கன்றினார் |
| ஷெ | சுந்தரர் | மானும்மரை |
| 36. திருமாகறல் | சம்பந்தர் | விங்குவிளை |

இவ்வண்ணமே மாணிக்கவாசகசுவாமிகள் அருளிச்செய்த 'நமச்சிவாய வாஅழ்க' என்று தொடங்கும் சிவபுராணம் முதல் அச்சோப்பதிகம் ஈருக ஐம்பத்தொரு பதிகங்கள் 658 திருப்பாசுரங்கள் சிலாசாசனம் செய்து தில்லை நடராசப்பெருமான் திருக்கோவில் சிவகங்கைத் தீர்த்தக்கரையில் பதிக்கப் பெற்றுள்ளது.

ஆண்டுதோறும் மாணிக்கவாசகர் தெய்வீகம் பெற்ற நன்னாளாகிய ஆனி மகத் திருநாளில், நம்மால் நியமிக்கப்பெறும் தக்க ஓதுவார்களைக் கொண்டு காலை 6 மணி முதல் நண்பகல் 12 மணி வரையில், ஷ திருவாசகத்தில் எல்லாத் திருப்பாசுரங்களையும் சிவகங்கைத் தீர்த்தக்கரையிலேயே ஓதச்செய்யப் பெறும். திருநெறிய மெய்ஞ்ஞானத் தேவாரத் திருமுறைகளில் பயிற்சி மிக்குடையவரும பண்ணென்ற இசைபாட வல்லுநரும் ஆகிய மூவர் ஷ பாராயணத்துக்கு நம்மால் நியமிக்கப்பெறுவர்.

ஷ பாராயணம் பூர்த்திபெற்றதும் அவரவர் தகுதிக்கேற்பச் சில்லரைச் செலவுட்பட மூவர்க்குமாகச் சன்மானம் மொத்தம் ரூ. 35–00 வரை செலவிடப்பெறும்.

5. ஷ இரு செலவுகள் போக எஞ்சியுள்ள தொகை சிதம்பரத்தில் நாம் குறிப்பிடும் இடத்தில் நந்தனவனம் வைத்துப் பராமரிப்பதற்காகச் செலவிடப் பெற்றுவரும். நந்தனவனத்து அன்றலர்ந்த புஷ்பங்களைத் தில்லை நடராஜப்பெருமானுக்கு அணிவிக்க நாடோறும் அளிக்கப்பெற்றுவரும்.

6. இவ்வருமானத் தொகை வேறு எம்முறையிலும் மாற்றியமைக்கப் பெறமாட்டாது. ஷ செலவுகள் நிகர வருமானத்துக்கு ஏற்பக் குறைக்கவும், கூட்டவும்பெறும். இந்நில புலங்கள் நம்பேரிலும் நமக்குப்பின் உரிமையுள்ளவர்கள் பேரிலும் சுவாதீனத்திலும் பரிபாலனத்திலும் இருந்து வரும்.

7. இந்த நிலத்தின் நிகர வருமானம் ரூ. 1500/– நிலப் பெறுமானம் ரூ 30,000/–

பாலு மமுதமுந் தேனுடனும் பராபரமாய்க்
கோலங் குளிர்ந்துள்ளங் கொண்டபிரான் குரைகழல்கள்
ஞாலம் பரவுவார் நன்னெறியாம் அந்நெறியே
போலும் புகழ்பாடிப் பூவல்லி கொய்யாமோ. — *திருவாசகம்*

ஷெடியூல்.

தஞ்சாவூர் ரிஜிஸ்தரேஷன் டிஸ்டிரிக்ட்டு திருவிடைமருதூர் சப்ரிஜிஸ்தரைச் சேர்ந்த கும்பகோணம் தாலுக்கா, 44 சூரியமூலை வட்டம், சூரியமூலை கிராமத்தில்

| | | | |
|---|---|---|---|
| ரி. சர்வே. நெ. | 173-1 | புன்செயில் நஞ்செய் | 0-97 |
| | 173-2 | நஞ்சை | 1-14 |
| | 174-2 | ஷை | 1-02 |
| | 174-3 | ஷை | 0-39 |
| | 174-4 | ஷை | 0-33 |
| | 175-3 | ஷை | 1-16 |
| | 176-1 | ஷை | 0-67 |
| | 176-3 | ஷை | 0-44 |
| | 176-5 | ஷை | 2-42 |
| | 176-6 | ஷை | 0-66 |
| | | ஆக நஞ்சை | 9-20 |

ஏக்கர் ஒன்பது, சென்ட் இருபது

Tirupanandal
Dated 4-9-1967 } (Sd.) *Kasivasi Arulnandi Tambiran.*



Registered at Tiruvedamarudhur Sub Registrar's office on 4-9-67 as No. 1638 of 1967 of Book 1 volume 1246 pages, 17 to 21.

உ

திருப்பனந்தாள் – ஸ்ரீ காசி மடம்

# ‘ திருமுறை வெளியீடுகள் ’

| | | ரூ. | பை. |
|---|---|---|---|
| 1 | விநாயகர் திருமுறை (அச்சில்) ... | | |
| 2 | ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத்திரட்டு டாக்டர் சாமிநாத ஐயர் குறிப்புரையுடன் (புதிய பதிப்பு) | 3 | 50 |
| 3 | சிவக்கொழுந்து தேசிகர் பிரபந்தம் ... | 3 | 00 |
| 4* | திருஞானசம்பந்தர் தேவாரம்(மூலம் மட்டும் புதிய பதிப்பு) | 2 | 75 |
| 5* | திருநாவுக்கரசர் தேவாரம் .. ... | 2 | 00 |
| 6* | சுந்தரர் தேவாரம் .. ... | 1 | 30 |
| 7* | திருவாசகம் (புதிய பதிப்பு) ... | 0 | 65 |
| 8 | ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் அருளிச்செய்த காசிக் கலம்பகம் மூலமும் அரும்பதக்குறிப்பும் ... | 0 | 40 |
| 9 | .. சிதம்பர மும்மணிக்கோவை மூலமும் அரும்பதக்குறிப்பும் ... | 0 | 20 |
| 10 | ஒன்பதாம் திருமுறை-திருவிசைப்பாவும் திருப்பல்லாண்டும் தெளிவுரை ... | 1 | 50 |
| 11 | .. .. மூலம் மட்டும் ... | 0 | 56 |
| 12* | பதினோராந் திருமுறை (புதிய பதிப்பு) .. ... | 1 | 50 |
| 13* | பெரியபுராணம் (மூலம் மட்டும்) ... | 3 | 00 |
| 14 | பெரியபுராணம் (உரை நடை) ... | 2 | 00 |
| 15 | திருத்தொண்டர் புராணச்சாரம் ... | 0 | 40 |
| 16* | அகத்தியர் தேவாரத் திரட்டு ... | 0 | 36 |
| 17 | திருவிளையாடற் புராணம் (மூலம் மட்டும்) ... | 3 | 00 |
| 18 | திருவிளையாடற்புராணம் உரை நடை ... | 2 | 25 |
| 19 | கந்தபுராணச் சுருக்கம் (மூலம் மட்டும்) ... | 1 | 75 |
| 20 | கந்தபுராணம்-முதல் மூன்று காண்டங்கள்(மூலம்மட்டும்) | 2 | 75 |
| 21 | .. யுத்த தேவ காண்டம் ... | 2 | 00 |
| 22 | .. தக்ஷகாண்டம் ... | 1 | 50 |
| 23 | கந்தபுராண உரைநடை .. ... | 3 | 00 |
| 24 | திருக்குறள் அறத்துப்பால் மூலமும் குறிப்புரையும் ஹிந்தி மொழி பெயர்ப்பும் ... | 1 | 50 |
| 25 | திருக்குறள்-பொருட்பால் .. ... | 2 | 50 |
| 26 | திருக்குறள் - காமத்துப்பால் .. | | |
| | ஷ 24, 25, 26 திருக்குறள் 3புத்தகமும் ... | 4 | 00 |
| 27 | திருக்குறள் மூலமும் குறிப்புரையும் (அச்சில்) | | |
| 28 | தாயுமானசுவாமிகள் பாடல் குறிப்புரையுடன் ... | 1 | 25 |
| 29 | அம்மையார் அற்புதத் திருவந்தாதி (புதிய பதிப்பு) ... | 0 | 25 |
| 30 | திருக்கைலாய ஞானவுலா-உரையுடன் ... | 0 | 50 |
| 31 | கந்தர் அலங்காரம் குறிப்புரையுடன் ... | 0 | 25 |
| 32 | கந்தரனுபூதி மூலம் (அச்சில்) | | |
| 33 | கந்தரனுபூதி தெளிவுரை ... | 0 | 35 |
| 34 | கந்தர்கலி வெண்பா - ஆங்கிலம் ஹிந்தி மொழிபெயர்ப்புகளுடன் (அச்சில்) | | |
| 35 | கந்தர்கலி வெண்பா மூலம் மட்டும் ... | 0 | 10 |
| 36 | கந்தர்கலி வெண்பா மூலமும் உரையும் (அச்சில்) | | |
| 37 | நீதிநெறி விளக்கம் - ஆங்கிலமும், ஹிந்தியும் ... | 0 | 50 |
| 38 | நீதிநெறி விளக்கம் - மூலம் ... | 0 | 10 |
| 39 | நீதிநெறி விளக்கமும் நன்னெறியும்-மூலம் ... | 0 | 15 |

Registered With the Registrar of Newaspapers for India
Under No. R. No. 1485/57.
Regd. No. M. 5574 

41 திருக்குறள்-பொருட்பால்-பரிமேலழகர் உரை
'இலக்கணக் குறிப்பின் விளக்கம் ... 0 13
42 திருச்செந்தூர்க் கந்தர்கலிவெண்பா-மதுரை மீனாட்சி
யம்மை பிள்ளைத்தமிழ்-மதுரைக்கலம்பகம்-நீதிநெறி
விளக்கம்-மதுரை மீனாட்சியம்மை இரட்டைமணி
மாலை மதுரை மீனாட்சியம்மை குறம் ... 2 75
43 திருவாரூர் நான்மணிமாலை-முத்துக்குமாரசுவாமி
பிள்ளைத்தமிழ் ... 1 25
44 சிதம்பர மும்மணிக்கோவை-சிதம்பரச்செய்யுட்
கோவை தில்லைச் சிவகாமியம்மை இரட்டைமணிமாலை 1 00
45 பண்டார மும்மணிக்கோவை-காசிக்கலம்பகம்
சகலகலாவல்லி மாலை ... 1 00
46 சிதம்பரச் செய்யுட்கோவை ... 0 75
47 முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ் ... 0 50
48 திருவருட்பயன் மூலம் இந்தி, ஆங்கில மொழிபெயர்ப்புடன் 1 00
49 * திருக்கயிலைத் திருமுறை ... 0 37
50 திருக்கடவூர்த் திருமுறையும் பிரபந்தங்களும் ... 0 19
51 செந்திலாண்டவன் மகிமை ... 0 15
52 திருக்குறள்-உரைக்கொத்து-அறத்துப்பால் 3-ம் பதிப்பு 1 37
53 ஷை ஷை பொருட்பால் 2-ம் பதிப்பு 2 75
54 இந்து நீதி நூல்கள் ... 0 10
55 ஸ்ரீ சயிலம் ... 0 10
56 திருவாசகம் குறிப்புரையுடன் (விஷய சூசனத்துடன்)
பழய பதிப்பு ... 1 50
57 திருவாரூர்-திருப்பனுவல்கள் ... 0 10
58 திருவெம்பாவை-திருப்பள்ளியெழுச்சி ... 0 10
59 பழமொழித்திருமுறை ... 0 25
60 திருவாரூர் நான்மணிமாலை ... 0 50
61 Hymns and Proverbs ... 0 30
62 அப்பர்விழா வெளியீடு ... 0 25
63 நவக்கிரகமாண்பு ... 0 25
64 குமரகுருபரர் வரலாறும், அற்புதத்தேவாரத் திரட்டும் ... 0 30

மேலே கண்ட நூல்கள் கிடைக்குமிடங்கள்:-

1. ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் கலைக்கோயில், ஸ்ரீவைகுண்டம்.
2. ஸ்ரீ K. சுப்பிரமணிய அய்யர் அவர்கள்.

"தியாகராஜ விலாசம்" 58, பிள்ளையார் கோயில்தெரு,
திருவேட்டீஸ்வரன்பேட்டை, திருவல்லிக்கேணி, சென்னை-5

குறிப்பு:- * இக்குறியிடப் பெற்றவற்றின் விற்பனைத் தொகை ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்களால் நிறுவப்பெற்ற பன்னிரு திருமுறைப் பதிப்பு நிதியைச்சாரும். மற்ற நூல்களில் திருக்குறள் உரைக்கொத்து (எண் 52, 53, 54) தவிர்த்து எஞ்சியவற்றின் விற்பனைத்தொகை 'குமரகுருபரன்' பத்திரிகையைச்சாரும்